KALKI 3.4.94 ரூ. 3.00

# கல்கி



## லேடீஸ் ஹாஸ்டல்:

# சந்தோஷச் சிறை!
















"அசாத்தியம்" என்று சொன்னார்கள்.

"இவ்வளவு விரைவான வளர்ச்சி சாத்தியமில்லை" என்றார்கள்!

நல்ல வேளை, அவர்களை நாங்கள் பொருட்படுத்தவில்லை!

விவேகமுள்ள எங்கள் டெபாசிட்தாரர்கள் மிக உயர்தரமான சேவையைப் பெறுகிறார்கள். (போட்டியிடும் மற்ற சாதாரண சேவைகளை விட தனிச்சிறப்பு பெற்றது). இந்த சேவைகள் யாவும் வாடிக்கையாளர்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டு வடிவமைக்கப் பட்டவை. 30 நிமிடங்களில் கடன் பெறும் வசதி, திரும்ப பெறும் டெபாசிட் தொகை இந்தியா முழுதும் சமமாக ஏற்கப்படும் வசதி, 24 மணி நேரமும் தகவல் பதிவு செய்யும் வசதி, நள்ளிரவிலும் பணம் பெற்றுக் கொள்ள வசதியாக ATM கார்டு மற்றும் வாரத்தில் 7 நாட்களும் சேவை ஆகியவை, எங்கள் தொடர்பு எளிதில் கிடைப்பதையும், சுலபமாக பணம் பெற முடிவதையும் உறுதிப்படுத்தும் சிறப்பு அம்சங்கள் ஆகும்.

அனுமதிக்கப்பட்ட அதிக பட்ச வட்டியுடன், பிரபலமான வர்த்தக மையங்கள் தரும் தள்ளுபடி சலுகைகள், இலவச வரி ஆலோசனை மற்றும் பல மதிப்புமிக்க சேவைகளும் எங்கள் டெபாசிட்தாரர்களுக்கு உண்டு.

எங்களுடைய நற்பெயருக்கும், நன்மதிப்புக்கும் காரணங்கள் பல:

• 75,000 - க்கும் அதிகமான முதலீட்டாளர்கள் அடங்கிய எங்கள் குடும்பம். • எங்கள் டெபாசிட் திட்டத்திற்குக் கிரைஸில் அளித்துள்ள FAA மதிப்பீடு • எங்கள் கமர்ஷியல் பேப்பர் திட்டத்திற்குக் கிரைஸில் அளித்துள்ள அதிகபட்ச மதிப்பீடான P1+ • UTI, IDBI, IFCI மற்றும் SIDBI போன்ற நிறுவனங்கள் செய்துள்ள முதலீடு. • SEBI அமைப்பினால் முதற்பிரிவு மர்ச்சன்ட் பாங்கர் ஆகப் பணி புரிய அனுமதி. • SEBI அமைப்பினால் எங்களுடைய மியூச்சுவல் ஃபண்ட்களுக்கு அங்கீகாரம்.

வேகமான, வீரியமான வளர்ச்சியை சாதித்துக் காட்ட வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம்.

இன்னுமா அதை அசாத்தியம் என்று சொல்கிறீர்கள்?

# SRF

# SRF ஃபைனான்ஸ் லிமிடெட்

**SRFF நிறுவனத்தில் முதலீட்டுக்கான வழி வகைகள் மற்றும் சேவைகளின் சிறப்பு அம்சங்கள் பற்றி மேலும் விவரம் தெரிந்து கொள்ள, இந்தக் கூப்பனைக் கீழ்கண்டவற்றில் ஏதேனும் ஒரு முகவரிக்கு அனுப்புங்கள். ஃபேக்ஸ் மூலமும் அனுப்பலாம்.**

6, அவென்யு ரோடு, நுங்கம்பாக்கம், **சென்னை** 600 034.
தொலைபேசி: 8275272, 8253318 ஃபேக்ஸ் எண்: 8258103.

797F, ஸ்ரீ ராம் மோகன் காம்ப்ளெக்ஸ், சக்தி ரோடு,
**கோயம்புத்தூர்** 641 012. தொலைபேசி: 48576.

127, மேக்கர் சேம்பர்ஸ் - VI, நரிமன்பாயின்ட், **பம்பாய்** - 400 021.
தொலைபேசி: 2833377, 2872631 ஃபேக்ஸ் எண்: 022-2835408

பதிவு அலுவலகம்: A/8/4, சப்தர்ஜங் என்க்ளேவ் மார்க்கெட்,
**புது டெல்லி** 100 029. தொலைபேசி: 600045, 6873103
ஃபேக்ஸ் எண் 6876950.

பிக்சட் டெபாசிட்டுகள் பற்றிய சட்டபூர்வமான விளம்பரம் 26.3.93 தேதியிட்ட எக்கனாமிக் டைம்ஸ் பத்திரிக்கையில் வெளிவந்துள்ளது.

---

உங்கள் டெபாசிட் திட்டங்கள் பற்றிய விவரங்களை தபால் மூலம் அறிய விரும்புகிறேன் (அ) உங்கள் பிரதிநிதியை ______ தேதியன்று காலை/மாலை ______ மணிக்குஎன்னைச் சந்திக்க ஏற்பாடு செய்யவும்.

பெயர் ______

முகவரி ______

______

______

தொலைபேசி எண்: (அலுவலகம்) ______

(வீடு) ______

பிறந்த தேதி ______

**சென்னைக் கிளை ஞாயிற்றுக் கிழமைகளிலும் திறந்திருக்கும்.**

## சந்திப்பு : க. ராஜாராம்

# "எம்.எல்.ஏ. பதவி பறிக்கப்பட்டால் நீதிமன்றம் நியாயம் வழங்கும்!"

**கேள்வி:** எந்தக் கட்சியையும் சாராத உறுப்பினர்களாகிய நீங்கள், ஜி. விஸ்வநாதன் மற்றும் அழகு திருநாவுக்கரசு ஆகியோர் ஒரு குழுவாகச் செயல்பட்டது கட்சித் தாவல் சட்டத்துக்கு முரணானது என்று சொல்லி சபாநாயகர் நோட்டீஸ் கொடுத்திருக்கிறாரே!

**க.ராஜாராம்:** எங்கள் செயல்பாட்டில் என்ன தவறு இருக்கிறதென்று எனக்குத் தெரியவில்லை. ஜனநாயக அமைப்பில், சட்டங்களுக்குக் கொடுக்கப்படும் அதே மரியாதையை மரபுகளுக்கும் கொடுக்க வேண்டும். ஆனால் இந்த ஆட்சியில், சட்டங்களே பந்தாடப்படும் நிலையில், மரபுகளைக் காற்றில் பறக்க விடுவது ஒன்றும் ஆச்சர்யம் அளிக்கவில்லை. நாங்கள் ஒரு குழுவாக செயல்படத் தீர்மானித்தது ஏன்? எங்கள் மூவருக்கும், முக்கியமான பிரச்னைகளைப் பேசுவதற்கு, தனித் தனியாக ஐந்து நிமிடங்கள் தான் தருவார்கள். இப்போதுள்ள சட்டசபையில், ஐந்து நிமிடம் கொடுத்தால், மந்திரிகளின் குறுக்கீட்டிலேயே நாலரை நிமிஷம் போயிவிடும். இந்த நிலையில், நாங்கள் குழுவாகச் செயல்பட்டால், ஒருவர் நேரத்தை இன்னொருவருக்குக் கொடுக்க முடியும். நாட்டு நிலைமைகளையும் தொகுதி நிலைமைகளையும் சரிவர எடுத்துச் சொல்வதற்கு இது உதவும்.

பாராளுமன்றத்தில் க. சுவாமி சுயேச்சைகளுடன் சேர்ந்து இப்படித்தான் இயங்கிக் கொண்டிருக்கிறார். மரபு ரீதியாக அமைக்கப்பட்டு வரும் முறை இது. இந்த நிலையில், 'எங்களைக் குழுவாக அங்கீகரிக்க முடியாது' என்று இரண்டு நாட்களுக்கு முன் சபாநாயகர் சொன்னபோதே விஷயம் முடிந்துவிட்டது. பின்னர் நோட்டீஸுக்கு அவசியமோ இல்லை. ஆனால்





''கொஞ்ச நாளா கனவுல நடிகைங்களே வரமாட்டேன்றாங்க டாக்டர்!''

''அவுட்டோர் போயிருப்பாங்களா இருக்கும்!''

- அம்பை தேவா

முதல்வர் ஜெயலலிதா, எப்படியாவது எங்களைச் சட்டமன்றத்தை விட்டுத் தூக்கிவிடப் பார்க்கிறார். நடுநிலையாகச் செயல்பட வேண்டிய சபாநாயகர், கட்சிக்காரரைப் போல் நடந்து கொள்கிறார்.

**கேள்வி:** சபாநாயகர் உங்கள் மூவரையும் சட்டமன்ற உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கி விட்டால் உங்கள் அடுத்தக் கட்ட நடவடிக்கை என்னவாக இருக்கும்?

**கு.ரா:** கட்சித் தாவல் தடைச் சட்டத்தில் எந்தக் கட்சியையும் சாராத (Unattached members) உறுப்பினர்கள் குழுவாகச் செயல்படுவது பற்றிக் குறிப்பாக ஒன்றும் இல்லை. ஆகவே அந்த அடிப்படையில் நடவடிக்கை எடுத்தால், நாங்கள் நீதிமன்றத்துக்குப் போக வேண்டியதுதான். சபாநாயகர் தம்மை யாரும் தட்டிக் கேட்க முடியாது என்ற எண்ணத்தில் இருக்கிறார். சமீபத்தில் சுப்ரீம் கோர்ட், மணிப்பூர் சபாநாயகரையே, கோர்ட்டுக்கு கூப்பிட்டு விசாரித்ததை இவர் மறந்து விட்டார் போலிருக்கிறது.

**கேள்வி:** அடுத்த ஆறு மாத காலத்தில் தமிழக அரசியல் எப்படியிருக்கும்?

**கு.ரா:** இன்னமும் ஒரு மாத காலத்தில் இந்த ஆட்சிக்கு முடிவு கட்டப்படும். சுவாமி போட்டுள்ள பதவி பறிப்பு வழக்கில் ஜெ.வின் பதவி ஆட்டம் கண்டுவிடும். அந்த நிலையில் நாங்கள் சட்டமன்ற உறுப்பினராக இருந்தால் அ.தி.மு.க. உறுப்பினர்களைச் சுலபமாகக் கவர்ந்துவிடுவோம் என்று எண்ணித்தான் எங்களைத் தூக்கிவிடப் பார்க்கிறார்கள்.

**கேள்வி:** ஜெயலலிதாவைக் கடுமையாக விமர்சித்து வருபவர்கள் அவரிடமே சரணடைவது சமீப காலங்களில் நடந்து வருகிறது. உதாரணம்: பி. எச். பாண்டியன், வி.வி.சுவாமிநாதன், புலமைப்பித்தன். இந்த நிலையில் நீங்கள் அ. தி. மு. க. வுக்கு மீண்டும் போக வாய்ப்பு இருக்கிறதா?

**கு.ரா:** நான் இப்போது அ.தி.மு.க.வில் தானே இருக்கிறேன்? இன்னமும் சொல்லப் போனால், என்னைக் கட்சியை விட்டு ஜெ. நீக்கியதை எதிர்த்து கோர்ட்டுக்குச் சென்றிருக்கிறேன். ஜெ.வை வெளியேற்றிவிட்டு அ.தி.மு.க.வைச் சுத்தப்படுத்துவதே எங்கள் வேலை. மீண்டும் ஜெ.விடம் சரணடைந்தவர்கள், ஜெ.வைத் தனிப்பட்ட முறையில் கூட கடுமையாக விமர்சித்தவர்கள். ஆனால் நான் அப்படிப்பட்டவனல்ல. அண்ணாவினால் பயிற்றுவிக்கப்பட்டவன். ஒருவரை அரசியல் ரீதியாக விமர்சிப்பேனே தவிர, தனிப்பட்ட முறையில் அல்ல. ஆகவே சிந்தித்து செயல்படுவேனே தவிர, உணர்ச்சி வேகத்தில் நான் எந்த முடிவும் எடுப்பதில்லை. ஆகவே ஜெ.விடம் மீண்டும் சரணடைவது என்ற பேச்சுக்கே இடமில்லை. ராஜீவ் காந்தி மரணமடைந்ததன் காரணமாக, மாறாத பலம் கொண்ட ஆட்சியை அமைத்து விட்டார் ஜெயலலிதா. ஜனநாயகத்தில் மாறாத பலம், சர்வாதிகாரத்துக்குத் தான் மேடை போட்டுக் கொடுக்கும். இப்போது அதுதான் அரங்கேறிக் கொண்டிருக்கிறது.

சந்திப்பு: ப்ரியன்

படம்: கோபிநாத்

## அடுத்த இதழில்...

●● **அவசர யுகத்தின் அதிவேக உணவு!**

— கவர் ஸ்டோரி

●● **தலைகீழாக மாறிய காஷ்மீர்!**

— அதிர்ச்சி தரும் தகவல்கள்

# க்ளிண்டன் அமைச்சரவையில் ஒரு தமிழர்!

க்ளிண்டன் அரசில், உயர் பதவியில் இந்தியர் ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். அதுவும் தமிழர். அவர் பெயர் டாக்டர் டி.ஆர். லட்சுமணன். அவர் வகிப்பது அமைச்சர் பதவிதான். ஆனால் நம்ம ஊர் போல் தலைவருக்குக் கட் அவுட் வைப்பதும், நிதி திரட்டிக் கொண்டு தலைவர் வீட்டுக்குப் போய்க் கொடுத்து வருவதும் இவர் வேலையல்ல.

போக்குவரத்துத் துறையில் நவீன மாற்றங்களைச் செய்வதற்காகச் சில அத்தியாவசியப் புள்ளி விவரங்களைக் கணித்து வரும் துறை இவருடையது. மழைக் காலத்திலும், பனிக்காலத்திலும் போக்குவரத்து பாதிப்புகளால் ஏற்படும் நஷ்டங்கள், அதைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகள் ஆகியவற்றை அதிபருக்குச் சொல்லும் பொறுப்பான பதவி வகிக்கிறார் லட்சுமணன்.



● திருக்கடையூரில் அறுபதாம் கல்யாணத்தன்று...



● டாக்டர் லட்சுமணன்

நன்னிலம் அருகே உள்ள எண்கண் என்ற கிராமம் இவரது சொந்த ஊர். உபகாரச் சம்பளம் பெற்று எஸ்.எஸ்.எல்.சி. படித்தவர். சென்னை விவேகானந்தாவில் புவியியலில் பட்ட மேற்படிப்பை முடித்து, கல்கத்தாவில் ஓர் ஆராய்ச்சி நிறுவனத்தில் சேர்ந்தார். அங்கு அமெரிக்கப் பேராசிரியர்களுடன் தொடர்பு ஏற்பட்டு, 1960 லேயே அமெரிக்கா சென்றார். சில காலம் பல்கலைக் கழகங்களில் பேராசிரியராகப் பணியாற்றிவிட்டு, போக்குவரத்து மற்றும் பொருளாதாரத்தில், ஆலோசனை சொல்லும் கம்பெனி ஒன்றைத் தனியாகத் துவக்கினார். அந்தக் கட்டத்தில் உலகெங்கும் சுற்றுப்புறச் சூழல் சம்பந்தமாக விழிப்புணர்வு ஏற்படுவதைப் பார்த்து, பாஸ்டன் பல்கலைக் கழகத்தில் அந்தத் துறையில் பயின்ற பின்னர் அங்கேயே துணைத் தலைவராகவும் ஆனார்.

''எங்கள் அம்மாதான் எங்களுக்கு உந்து சக்தி. வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் அடுத்ததென்ன, அடுத்ததென்ன என்று எங்களைத் தூண்டி விட்டுக் கொண்டே இருப்பார்'' என்று சொல்கிறார் லட்சுமணனின் சகோதரர் நடராஜன்.

பாஸ்டனில் உள்ள லட்சுமணனின் பங்களாவில் மொத்தம் 24 அறைகள். வாசலில் சிறிய பிள்ளையார் கோவில். மனைவி லதா, வங்காளத்தைச் சேர்ந்தவர். இரண்டு மகன்கள். சமீபத்தில் தமது அறுபதாம் கல்யாணத்தைத் திருக்கடையூரில் வந்து செய்து கொண்டு போனார் லட்சுமணன்.

ஜனநாயகக் கட்சியின் அனுதாபி இவர். இன்று அந்தக் கட்சியின் பிரமுகர்களுக்குச் சுற்றுப்புறச் சூழல் பற்றிய பேச்சுக்களை எழுதிக் கொடுப்பவர் இவர்தான். அந்த வகையில் க்ளிண்டனுக்கும் இவர்தான் பேச்சுக்களைத் தயாரிக்கிறாராம்!

– ஸ்ரீநிவாசன்.

வாசகர் யோசனை : பி.எஸ். பாலா

# லேடீஸ் ஹாஸ்டல்: சந்தோஷச் சிறை!



"ஹலோ! சாந்தி இருக்காங்களா...?"

"சாந்தி இன்னும் வரலை..."

"ஹலோ... ஹலோ...!"

"......."

போன் இணைப்பு 'கட்' செய்யப்பட்டு விட்டது.

மீண்டும் டயல் செய்து சாந்திக்குத் தகவல் தெரிவிக்க முற்பட, மீண்டும் * 'சாந்தி வரலை' என்ற தந்தி வாசகத்துடன் லைன் கட்!

ஒரு பிரபல ஒர்க்கிங் விமன்ஸ் ஹாஸ்டலில்தான் இந்த மரியாதை நமக்குக் கிடைத்தது.

தோழியை நேரில் பார்க்கலாம் என்று கிளம்பிப் போனால், வரவேற்பு படு பலம்!

"கேட்டாண்ட போய்க் குந்துமா இங்கே உள்ளேயெல்லாம் வரக்கூடாது!"

விரட்டியவர் காவலாளி. தோழி வரும் வரை அரைமிருட்டில் காத்து நின்று தகவல் சொல்லிவிட்டு,

"உங்க ஹாஸ்டல் ஆனாலும் அராஜகம்" என்று ஆரம்பித்தால்...

"ஐயோ! இங்க வாயே திறக்காதே..." என்று கெஞ்சாத குறையாகச் சொல்கிறாள் சாந்தி.

"ஏதாவது புகார் சொன்னேன்னு காதுல விழுந்தா வார்டன் என்னை வெளியே அனுப்பிடுவாங்க... அப்புறம் நான் எங்கே போவேன்?"

"உன்னைப் பார்த்தா பாவமா இருக்கு சாந்தி..."

"அனுதாபத்தை வேஸ்ட் பண்ணாதே! நான் சந்தோஷமாகத்தான் இருக்கேன்..." என்றாள் சாந்தி.

"எப்படி...?"

"கை நிறைய சம்பாதிக்கறேன். இங்க தங்கிக்கறதுக்கும் சாப்பாட்டுக்கும் ஆகற செலவு போக ஊருக்குத் தாராளமா பணம் அனுப்ப முடியுது; சேமிக்க முடியுது..."

"இப்படி பயந்து பயந்து, ஆயிரத் தெட்டு கட்டுப்பாடுகளோட இருக்கறது எப்படி சந்தோஷமாகும்...?"

"அதெல்லாம் கஷ்டம்தான்; சில நாள் சாப்பாடு கூட வாய்ல வைக்க முடியாது தான். பொறுத்துத்தான் போகணும்! வேற வழி...?"

வேறு வழியில்லாதவர்கள் வந்து சேரும் இடம் தான் பெண்கள் ஹாஸ்டல்கள்.

இவர்களின் சார்ந்திருக்கும் நிலை மனோதத்துவ ரீதியில் வார்டன்களுக்கு ஒருவித போலி பராக்கிரமம் உணர்த்த, அவர்கள் இந்தப் பெண்களைப் படாத பாடுபடுத்துவதைப் பல ஹாஸ்டல்களில் பார்க்க முடிகிறது.

கேட்டால், "எங்களுக்குப் பொறுப்பு இல்லையா? நாளைக்கு ஏதேனும் அசம்பாவிதமாக ஆனால் நாங்கள்தானே பதில் சொல்லணும்? எங்க ஹாஸ்டலுக்குத்தானே கெட்ட பெயர்? இந்தக் காலத்துப் பெண்களையெல்லாம் எப்படி நம்பறது?" என்கிறார்கள் இவர்கள். அதற்காக விதிகளை ஒரேயடியாக இறுக்குகிறார்கள்.

"நம்பிக்கையின் அடிப்படையில் இன்றி; இப்படிச் சந்தேகத்தின் அடிப்படையில் ஓர்

---

* பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.



ஒப்பந்தம் செய்து கொண்டு வாழ்வது எரிச்சலாக இல்லையா...?'' என்று சில பெண்களிடம் கேட்டோம்.

''அவ்வளவு ஆழமா நாங்க யோசிக்கலை; ஆனால் வாட்ச்மேன் முதற்கொண்டு வார்டன் வரை சகலருக்கும் பதில் சொல்லக் கடமைப்பட்டிருப்பது ரொம்ப ஆரோக்கியமான சூழல்னு சொல்லிக்க முடியாது! அதுக்காக நாங்க ஹாஸ்டலில் சந்தோஷமே இல்லாம வாழறோம்னு முடிவுக்கு வந்திடாதீங்க... ரொம்ப ரொம்ப சந்தோஷமான நேரங்களும் வாழ்க்கைல உண்டு...'' என்றார் பானுமதி.

''ஒரு நல்ல ரூம் மேட் மட்டும் கிடைச்சுட்டா ஹாஸ்டல் லைஃப் ரொம்ப ரொம்ப ரசிக்கிற மாதிரி அமைஞ்சுடும்'' என்பது சுபாவின் கருத்து.

''ஆபீஸ் பொறுப்போடு சரி; இங்கே வந்த பிறகு உப்பு, புளி கவலையோ, தண்ணி பிடிக்க வைக்கணுமே; காய்கறி வாங்கணுமே என்கிற பிரச்னையோ நமக்குக் கிடையாது. அந்தப் பொறுப்புகளை ஒருத்தர் பார்த்துக்கும்போது ஏன் நாம் சில விதங்கள்ல ஒத்துழைக்கக் கூடாது...?'' -இது அருள்மொழி.

''காலைல பாத்ரூமுக்காகப் போடற ஆரோக்கியமான சண்டையில் ஆரம்பிக்கும் எங்க கலகலப்பான வாழ்க்கை... அவசரமா ஒருத்தர் புடவை கட்டறப்ப, மத்தவங்க ப்ளீட்ஸ் அட்ஜஸ்ட் பண்றதும்; சில்லறை மாத்தி ரெடியா வைக்கறதும், ஆட்டோ ஷேர் பண்ணிக்கறதும்...'' இப்படி சின்னச் சின்ன அன்னியோன்யப் பரிமாறல்களைக் கண்கள் விரிய விளக்கினார் கீதா.

''ஏய் குண்டு! நைட் சாப்பாடு எடுத்து வைன்னு சொல்லிட்டுப் போனேன்; மறந்துட்டே இல்லை...!'' தோழியைச் சாடினார் மீனா.

''மறக்கலை மீனா...நான் சாப்பிட்ட உடனே முடிவு பண்ணிட்டேன்- அந்தக் கஷ்டத்தை நீயும் அனுபவிக்கக் கூடாதுன்னு... அதுனால உனக்கு பிரட் வாங்கி வச்சிருக்கேன் - ஸ்பெஷல் பிரட்'' என்றுபரிவு காட்டினார் சுமதி.

எல்லா ஹாஸ்டல்களும் ஹிட்லர் ராஜ்யங்கள் இல்லைதான். உதாரணத்துக்கு அண்ணா ஆதர்ஷ் ஹாஸ்டலில் எட்டிப் பார்த்ததை விவரிக்கலாம்.

அந்தப் பின் மாலைப் பொழுதில் ஹாஸ்டலின் சூழல், பாகற்காய் வற்றல் மணத்திலும் உழைத்துக் களைத்துத் திரும்பிய முகத்துடன் வலம் வந்த பெண்களின்



தளர்ந்த நடையிலும் களத்துப் போயி ருந்தது.

டீ.வி.முன் பல பேர்; படிக்கட்டுகளில் தோள் மேல் கை போட்டபடி 'மகாநதி' தேவலாமா, 'வீட்ல விசேஷங்க' போக லாமா என்ற விவாதத்தில் சிலர்; வீணை, கம்ப்யூட்டர் வகுப்புகள் என்று மறு படை யெடுப்புக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த வேறு சிலர்...

''மாலை நேர வகுப்புகள் போய் வர நாங்கள் அனுமதிக்கிறோம்'' என்கிறார் இதன் தலைவி மது நாவன். இந்த ஹாஸ் டலை நடத்தும் பஞ்சாப் அசோசியேஷன் அமைப்பால் நியமிக்கப்பட்டவர்.

''இந்த ஹாஸ்டலின் விதிகள் சந்தே கத்தின் அடிப்படையில் ஏற்படுத்தப்படு பவை அல்ல; நம்பிக்கையின் அடிப்படை யில் நாங்கள் வகுத்தவை...'' என்கிறார்.

ஹாஸ்டல் பெண்களுடன் பேசியதில் இதை உறுதி செய்து கொள்ள முடிந்தது.

''ஏதேனும் குறைகள் இருந்தால் பெண் கள் அவற்றைத் தாராளமாக எங்களிடம் சொல்லலாம். அவ்வப்போது கூட்டங்கள் நடத்தி அவர்களிடமே நாங்கள் ஆலோ சனை கேட்டும் செயல்படுகிறோம்...'' என்கிறார் இவர்.

**ஹா**ஸ்டல், நடத்துவோருக்கும் சில விநோத பிரச்னைகள் வருகின்றன.


● சிவராமன்

**''காலை நாலரை மணிக்கு எழுந்திருக்க வேண்டும். தியானம், வழிபாடு கட்டாயம்; புடைவை தவிர வேறு ஆடை உடுத்தக் கூடாது.''**

''ஓர் அறையில் இருக்கும் இரு பெண் களுக்குள் சண்டை வர, ஒருத்தி மற்ற வளைப் பற்றி கன்னா பின்னாவென்று மொட்டைக் கடுதாசி எழுதியனுப்பினாள். வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கும் பெண்கள் இப்படியா நடந்து கொள்வது? அவர்களால் ஒத்துப் போக முடியவில்லை என்றால் எங்களிடம் வெளிப்படையாகச் சொல்லி அறையை மாற்றிக் கொள்ள லாமே!'' என்கிறார் ஒரு வார்டன்.

''எல்லாரும் வளர்ந்த, பொறுப்புள்ள பெண்கள்தானே! ஹாஸ்டல் சாமான்களை யும் அறைகளையும், பாத்ரூம்களையும் தூய் மையா, அழகா வைக்கக்க வேண்டாமா? யாருக்குமே அந்தப் பொறுப்புணர்வு இருக் கறதில்லே... 'நம்ம வீடுங்கற' சுதந்திரத் தோட, 'நம்ம இடம்ங்கற' பொறுப்பும் வேண்டாமா?'' - இப்படி அங்கலாய்க் கிறார் மற்றொருவர்.

''மணமான பெண்களும் ஹாஸ்டல் களில் தங்கி வேலைக்குப் போவதுண்டு. இவர்களுள் ஒரு சிலருக்குக் கணவனுடன் பிணக்கு இருக்கும். சில நேரங்களில் அவர்களது சொந்தப் பிரச்னைகள் ஹாஸ்ட லின் பிரச்னைகளாகி விடுவதும் உண்டு. வேறு வழியில்லாமல் நாங்கள் போலீஸ் உதவியை நாட வேண்டியிருக்கும்'' என்று விவரித்தார் மற்றொரு வார்டன்.

இந்த வம்பெல்லாம் எதற்கு என்று தானோ என்னவோ, ராமகிருஷ்ணா மிஷன் நடத்தும் சாரதா ஹாஸ்டலில் கணவன் அல் லது பெற்றோர் சம்மதத்துடன் அவர்களை யும் நேரில் அழைத்து வரும் பெண்களை மட்டுமே சேர்த்துக் கொள்கிறார்கள்.

இதன் விதிகள் ஏறத்தாழ ஒன்றரை தலைமுறைக்கு முந்தி உருவாக்கப்பட்டன. அவையே இன்னமும் அமுலில் இருக் கின்றன. காலை நாலரை மணிக்கு எழுந் திருக்க வேண்டும். தியானம், வழிபாடு கட்டாயம்; புடைவை தவிர வேறு ஆடை உடுத்தக் கூடாது; பூஜை அறை சுத்தம் செய் தல், பரிமாறுதல் போன்றவற்றை முறை வைத்துக் கொண்டு செய்ய வேண் டும்; ஏழு மணிக்கு முன்னால் விடுதி திரும்ப வேண்டும்; நைட் டியூட்டி பார்ப்போருக்கு இங்கே கண்டிப் பாய் இடம் இல்லை!

'ஹவுஸ் கோட் சுதந்திரத்தைக் கூட அனுமதிக்காத ஒரு லேடீஸ் ஹாஸ்டலா?' என்று நாம் வியந் தால், ''இதில் ஒரு குற்றமும் இல்லை'' என்கிறார் விடுதிச் செய லாளர் சிவராமன்.

''எங்கள் விதிகள் என்ன வென்று தெரிந்துதானே இங்கே வந்து சேர்கிறார்கள்?'' என்கிறார் வார்டன் ஜெயஸ்ரீ.

''**த**மிழ்நாட்டில் பல பெண் கள் விடுதிகள் ஜனநாயக முறையில் இயங்குவதில்லை. இவை அரசின் மான் யமோ உதவியோ பெற்றுச் செயல்படுவ தால் இவற்றின் சீரிய செயல்பாட்டில் அரசுக்கும் பொறுப்பு உள்ளது. குறைகளை எடுத்துச் சொன்னால் விடுதிப் பெண்களை வெளியேற்றுவதாக அச்சுறுத்துகிறார்கள். சமூக நலத்துறை இந்த விடுதிகளை இன் னும் கவனமாகக் கண்காணித்துச் செயல்பட வேண்டும்'' என்கிறார் ஜனநாயக மாதர் சங்கத்தைச் சேர்ந்த மைதிலி சிவராமன்.

இவரது குற்றச்சாட்டைக் கண்டிக்கிறார் தமிழ்நாடு சமூக நலம் மற்றும் சத்துணவுத் திட்டத்தின் இயக்குனர் கன். தேவசகாயனம்.

குற்றச்சாட்டுகளை விசாரித்து நிவாரண நடவடிக்கை எடுக்க சமூக நல அலுவலர்களை உள்ளடக்கிய குழு செயல்பட்டு வருகிறது. அவ்வளவு குற்றம் குறைகள் இருந்தால் நான்கு பெண்கள் சேர்ந்து ஒரு வீடு பார்த்துக் குடித்தனம் வைக்க வெளியேறிவிட மாட்டார்களா...?'' என்கிறார் இவர்.

**ஆ**னால் நாம் விசாரித்த வரையில் குறைகளைத் தாங்கிக் கொண்டு காலம் தள்ள பெண்கள் தயாராயிருக்கிறார்களே யொழியே, தனி வீடு பார்த்துக் குடியேறும் துணிவு இன்னும் அவர்களுக்கு வரவில்லை.

''சமூகம் இன்னும் அதுக்குத் தயாராகலைங்க'' என்கிறார் எஞ்சினிரிங் படித்து விட்டு அம்பத்தூர் நிறுவனம் ஒன்றில் பணியாற்றும் விடுதிப் பெண் கலா.

''என் தோழி ஒருத்தி அப்படி செய்து பார்த்தா...ஆனால் கண்டவங்க வீட்டுக் கதவை இடிக்க ஆரம்பிச்சுட்டாங்க; கடைசில அவ வேலையையே விட்டுட வேண்டியதாயிடுச்சு...''

''நாம போகத் தயாரா இருந்தாலும் நமக்கு யாரு வீடு குடுப்பாங்க...? பாச்சலர்ஸ''க்குக் குடுக்க மாட்டாங்கன்ற மாதிரி ஸ்பின்ஸ்டர்ஸ''க்கும்தான் குடுக்கத் தயங்குவாங்க...'' என்கிறார் நீடா.

ஆனால் தமிழக அரசின் சமூக நலத் துறை அதிகாரிகள் பெண்கள் ஹாஸ்டல்களுக்குச் சென்று நீண்டநாள் விடுதிவாசிகளை, வெளியேறி வீடுகளில் குடிபோகும்படி ஊக்குவிக்கும் பணியில் இறங்கியிருக்கிறார்கள். பெண்களின் சார்புநிலை மாற வேண்டும் என்ற நல்ல நோக்குடன்தான் இப்பணி நடந்து வருவதாகத் தெரிகிறது. இதே நோக்குடன்தான் எந்தவொரு விடுதியிலும் ஒரே பெண்ணை ஐந்தாண்டுகளுக்கு மேல் வைத்துக் கொள்ள வேண்டாம் என்ற விதியும் வலியுறுத்தப்படுகிறதாம்.

நோக்கங்கள் உயர்வானவைதான். ஆனால் நடைமுறைக்கு உகந்தவையா என்றும் ஆராய வேண்டியுள்ளது. கீழ்க்கண்ட விஷயங்கள் தீவிரமான யோசனைக்குரியவை:

● ஆண்டுதோறும் கல்லூரிகளிலிருந்து வெளிப்படும் பொறியியல், மருத்துவ பெண் பட்டதாரிகள் மற்றும் பெண் சார்டர்ட் அகவுண்டன்ட்கள் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. இவர்கள் எல்லோரும் வேலை தேடி வெளியூர்களுக்குப் போய் விடுதி வசதி தேடும் கட்டாயம் அதிகரிக்கப் போகிறதேயொழிய குறையப் போவதில்லை.

● எந்தப் பெண்ணும் (ஏன் ஆணும் கூடத்தான்) திருமணம் ஆகி தனக்கென ஒரு வீட்டில் வாழ வேண்டும் என்றுதான் நினைப்பார். அதனால் தேவைக்கதிகமாக அவர் ஹாஸ்டலில் தங்கப் போவதில்லை. அதனால் ஐந்தாண்டு கெடு போன்ற விதிகள் அவசியமா? (இதை மிக வன்மையாக வலியுறுத்துவதில்லை என்பது ஆறுதல்)

● பெண்களுக்கென விடுதிகள் அமைக்க முன்வருவோருக்கு மத்திய அரசின் நிதியுதவி கிடைப்பதாகத் தெரிகிறது. எனினும் இதை ஏற்று, விடுதிகள் அமைத்து நடத்தத் தயாராயிருப்போர் மிகக் குறைவு.

● தனியார் துறையில் பெண்களை அதிகமாகப் பணியில் எடுத்துக் கொள்ள ஆரம்பித்திருப்பதால் அவர்களே ஏன் ஓர் அவசிய சேவையாக, அவர்களுக்கான விடுதிகளைத் தொடங்கக் கூடாது? (ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்துக்கு மேல் பெண்களை வேலையில் அமர்த்தினால் விடுதி வசதி செய்து தர வேண்டும் என்பதைக் கட்டாயமாக்கலாம். ஆனால் அதன் காரணமாகவே பெண்களைப் பணிக்கு எடுத்துக் கொள்வதைத் தவிர்க்கும் அபாயமும் இருக்கிறது.)

**இ**ப்போதைக்கு இந்தக் கவலைகளெல்லாம் அதிகம் படாமல் தமிழ்நாட்டின் சமூக நலத்துறையின் எட்டு விடுதிகளிலும் அரசு சார்பற்ற அமைப்புகளின் 63 விடுதிகளிலும் பெண்கள் தங்கிப் பயனடைந்து வருகிறார்கள். ஆனால் சென்னை நகரில் மட்டுமே விடுதிகளின் தேவை பத்து மடங்குக்குப் பெருகியிருக்கிறது என்று அறியும்போது, நாளை தங்குமிடம் தேடி அலையப் போகும் பெண்களை எண்ணி நெஞ்சு கலங்குகிறது.

''எங்கள் விதிகள் என்னவென்று தெரிந்துதானே இங்கே வந்து சேர்கிறார்கள்?''



● ஜெயஸ்ரீ

**- சீதா ரவி, மாலதி சந்திரசேகரன்**
அட்டை வண்ணப்படம்; படங்கள்:
**கோபிநாத்**



● வி. பிரபாகரன் : சாண்ட்விச் வியாபாரம்...

# மெட்ராஸ் நொறுக்ஸ்

கையேந்தி பவன் களும் நொறுக்குத் தீனி வகைகளும் இன்று சென்னை எங்கும் பரவி விட்டன. புதுப்புது வகைகள், சூப்பர் காம்பினேஷன் கள், அதி சூப்பர் சுவை என்பன இவற்றின் வெற்றி ரகசியம். ஆங்காங்கே கொஞ் சம் 'மேய்ந்து' வந்ததில்:

## சாண்ட்விட்சுகள் :

செளகார்பேட்டை யில் வெற்றிக்



● மூட்டை தூக்குபவர் பானிபூரி...

கொடி நாட்டியுள்ளது. மொத்தம் இங்கே 15 கடைகள் உள்ளன. பத்து, பதினோரு மணிக்கே வண்டியைத் தள்ளிக் கொண்டு வந்து நின்றுவிடு கிறார்கள். மூன்று, நான்கு மணிவரை சில்லறை வியாபாரம்தான். பின்னர் திமுதிமுவென கூட்டம். இரவு பதினொன்று வரை ஜமாய்தான்.

முதலில் ஒரு நல்ல அகலமான ரொட்டித் துண்டை எடுத்து, வெண்ணெய், சட்னி தடவி விட்டு (இது வீட்டுத் தயாரிப்பு) மேலே வட்ட வட்டமான வெள்ளரிக்காய், பின் வெங்காயம். மற்றொரு அடுக்கு, வட்டவட்டத் தக்காளி. பின் னர் உப்பும், காரமும் தூவி வேறொரு பிரெட் ஸ்லைஸால் மூடி, ஆறு துண்டுகளாக வெட்டித் தருகிறார்கள் ஒரு சுகம்பமான சுவை.

வி.பிரபாகர் சமீபத்திய வியாபாரி. நான்கு மாதம்தான் ஆகிறது கடைபோட்டு.

"+2 படிச்சேன். பம்பாய் போனேன். இதைச் செய்வதைக் கற்றுக் கொண்டேன். பக்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் ஏழு எட்டு வருஷமா இதே தொழிலைச் செய்யறாங்க. ஒரு நாளைக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம். ஒரே பிரச்னை போலீஸ். ஒரு நாளைக்கு முப்பது ரூபாய் மாமூல். அந்தச் செலவும் சேர்த்து, சாண்ட்விச் விலை மூன்று ரூபாய் ஆகிறது."

## கடலை மசாலா:

சமீபத்தில் சூப்பர் ஹிட் வகை. யாருக்குத் தோன்றிய ஐடியாவோ? ஒரு வருடத்திற்கு முன் பெல்லாம் வேக வைத்த கடலைக் காயாகவோ, வறுத்த வேர்க்கடலையாகவோ, விற்பனை யாகிக் கொண்டிருந்தது. இன்று அதனோடு நிறைய எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்ஸ்.

கொஞ்சம் வேர்க்கடலை, தக்காளி, வெங் காயம், கொத்தமல்லி, கேரட், எல்லாம் தூளாக் கிக் கலந்து, எலுமிச்சைப் பழத்தையும் பிழிந்து, ஒரு கலவை செய்து தருகிறார்கள்.

விலை ரூ. 2தான். குறிப்பாக இவர்கள் தான் வாங்குகிறார்கள் என்றில்லை. பஸ் ஸ்டாண் டில் பஸ்ஸுக்குக் காத்திருப்பவர்களிலிருந்து, ஜோல்னா பையர்கள் வரை இதன் பெருமை விரிந்தது, பரந்தது. ஓரிடம் என்றில்லாமல் நகர்ந்து கொண்டே இருக்கும் வியாபாரம்.

நூறு ரூபாய் வியாபாரம் உண்டு, ஒரு நாளைக்கு. பெரும்பாலும் இதைச் சாப்பிடுபவர் கள் பெரியவர்களே.

D.M.S. பஸ் நிலையத்தில் (ஓட்டல் ஸ்ரீலேகா எதிரில்) கிடைக்கும் கடலை மசாலாவுக்கு ரசிகர் மன்றம் வைக்கவே சிலர் தயாராக இருக்கிறார்கள்.

### பாணிபூரி:

சிலன்லால் - உத்திரப்பிரதேசக்காரர். தமிழும் சரியாகப் பேச வராது. ஆனால் பேசுவது புரியும். சௌகார்பேட்டை பக்கம் கடந்த மூன்று வருடமாக வியாபாரம். என்ன ஸ்பெஷாலிடி இவரிடம்?

''தெரியலை'' என்று சிரிக்கிறார். ஆனால் கூட்டம் அலைமோதுகிறது. ஒரு பிளேட் இரண்டு ரூபாய். ஐந்தாறு பேர்கள் நின்றாலும் சரசர வென்று பூரியை எடுத்து லாவகமாய்க் கட்டை விரலால் அதன் வாய் பிளந்து, கொஞ்சம் ஆலூ (உருளைக்கிழங்கு மசாலா) வைத்து, புளித் தண்ணீர் நிரப்பித் தருகிறார்.

பிளேட்டுக்கு ஐந்து பூரி. குறைந்த பட்சம் பத்துப் பதினைந்து பூரி சாப்பிடாமல் யாரும் நகர்வதில்லை.

''சாயங்காலமாகக் கடை போடுவேன். ராத்திரி பதினொன்று ஆகும் முடிய. முன்னூறு, முன்னூத் தம்பது ரூபாய் லாபம் வரும்'' என்றார் சிலன்லால். ''இப்போ மதராஸிகளும் நெறையச் சாப்பிடறாங்க. புளித் தண்ணீர் நிறையக் குடிக்கிறாங்க...''

### பாவ்பாஜி:

கொஞ்சம் காஸ்ட்லியான சமாசாரம். விலையே ரூ.12. இதற்கும் புகழ் பெற்ற இடம் சௌகார்பேட்டைதான். என். எஸ். சி. போஸ் ரோடு வழியாக தங்க சாலைக்குள் நுழைபவர்கள் புகழ் பெற்ற இந்தக் கடையைப் பார்த்திருப்பார்கள். பெட்ரோமாக்ஸ் விளக்கு ஒளி தெரு வெங்கும் வழிந்திருக்கும். பாஜி பண்ணும் அழகே அழகு. பத்து, பன்னிரண்டு வருடமாய் இக்கடை அங்கிருப்பதாகத் தெரிகிறது.

முதலில் பெரிய வாணலியில் கைகொள்ளும் வெண்ணெய்; வெங்காயம். கூடவே நிறைய நிறையத் தக்காளி. பின் வேக வைத்த உருளைக் கிழங்கு மற்றும் மார்க்கெட்டில் விலை குறைவாயிருக்கும் அனைத்து கறிகாய்களும் சேர்க்கிறார்கள். பின் அதை மசியோ மசி என்று மசிக்கிறார்கள். நடுவே இஞ்சி, சோம்பு, லவங்கம் போன்றவைகளை அரைத்துக் கரைத்திருக்கும் தண்ணீரை விட்டு, ஒரு இளம் கொட்டி ஸ்டேஜ் வரை கொண்டு வந்து, பிளேட்டில் அள்ளுகிறார்கள். இதுதான் பாஜி. பாவ் என்பது ரொட்டி. பிரெட்டை வெட்டி மீண்டும் வெண்ணெயில் தோய்த்து பாஜி பக்கத்தில் வைத்துத் தருகிறார்கள்.

பொடிசுகளிலிருந்து, தள்ளாட்டத்தின் பிடியில் உள்ள மார்வாரி வரை அனைவரின் நிருப்தியும் இதில்தான். அதற்கும்மேல் பார்சல்கள். குறைந்தபட்சம் பதினைந்து நிமிடமாவது காத்திருந்தால்தான் கைக்கு பாவ்பாஜி வரும்.

- பரத்

புகைப்படங்கள்: கோபிநாத்



# Kalki Shopping Page

# Kalki Shopping Page




**NEWLOOK** TAILORS

WE ACCEPT CREDIT CARDS

Opp. : T. Nagar Bus Terminus
Madras - 17 Phone : 44 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress to make the bride proud

## R. K. N. GOLD COVERING

ஒரிஜினல் சிதம்பரம் கோல்டு கவரிங்

எங்களிடம் ½ கிராம், 1 கிராம் செயின், நெக்லஸ், வளையல், கம்மல், உத்திரவாதத்துடன் கிடைக்கும்.

உபயோகித்தபின் எங்களிடம் திரும்பக் கொடுத்தால் பொருளுக்குத் தகுந்தாற்போல் பணம் கிடைக்கும்.

1 வருடம் முதல் 5 வருடம் வரை உத்திரவாதத்துடன் கிடைக்கும்.

திருமணம் மற்றும் விசேஷ வைபவங்களுக்கு நகைகள் வாடகைக்குக் கிடைக்கும்.

வெள்ளி ஜரிகை உருக்கித் தரப்படும்.

**R.K.N. கோல்ட் கவரிங்**

75, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை 600 017.

## B. M. SILK SAREES

● காஞ்சிபுரம் சில்க் சாரீஸ், ● Peacock Silks,
● பிரிண்டட் சாரீஸ், ● கோரா சில்க்ஸ் & காட்டன்,
● பர்வதா சுங்குடி சாரீஸ்

AVAIL FABULOUS DISCOUNT ON PARVATHA SAREES AND SUNGUDI SAREES
1.4.94 to 10.4.94

## B. M. SILK SAREES

5, வடக்கு மாட வீதி,
(கபாலீஸ்வரர் கோயில் அருகில்)
மைலாப்பூர், சென்னை - 600 004.

# Kalki Shopping Page

10 முதல் 20 %
தள்ளுபடி விற்பனை
புகழ் மிக்க

# ராணி
# சாரீஸ்

புதிய ஸ்டாக்
1-4-94 முதல் 9-4-94 வரை
மதுரை டெக்ஸ்டைல்ஸ்
2, சிவப்பிரகாசம் சாலை,
பாண்டி பஜார், சென்னை-17.

---

## NARAYANA



## PEARLS

Quality Hyderabadi Pearls and Corals, American diamonds, Tulasi sets (with or without the famous Bombay kundan work), Hyderabadi gold beads, leaf cutting jade, coral flower cutting and many more

These you get at
HYDERABAD Prizes

Basement, Kasi Arcade,
116, Thyagaraya Road,
T. Nagar, Madras - 600 017.

Get your pearl sets (purchased elsewhere) repaired by our specialist free of cost.

---

WINNERS OF 6.3.94 LUCKY DRAW :

1. C. N. Rajendraprasad, Coimbatore.
2. R. Roopeshkumar, Trichy.
3. K. Kirubakaran, Pondicherry.

Thousands of post-cards have encouraged us. The Lucky Draw was done by our client the Famous **Musical Director Mr. Shankar**

**Try your Lucky Draw again**

Send your Date of Birth. Time of Birth. Place of Birth and exact address.

***Price worth of Rs. 300/-; 200/-; 100/-.***

Your Birthstone will be given as per the prediction given by our Astrologer. Winners will be informed. You will see the difference for your future prediction contact us in person.

*Step at*

## JAIPUR JEMS 'N' JEWELS

North Usman Road,
Opp. A.R.R. Complex,
Near Panagal Park,
T. Nagar, Madras - 600 017.
Sounth India. (Tamil Nadu)

---

FABRIC SENSE
AND
FASHION ESSENCE
OF
TRUE SUNGUTI

## RANGACHARI CLOTH STORE

RCS

AVAIL DISCOUNT SALE
1 - 4 - 94 TO 5 - 4 - 94

55, Luz Church Road,
Mylapore, Madras - 4.
Phone : 4994545/4994343



போய்யா, உனக்குக் கட்சியும் கிடையாது, ஒண்ணும் கிடையாது!
சேடப்பட்டி
பா.ம.க.
பண்ருட்டி
தேர்தல் சமயத்தின் முடிவு தெரியற வரைக்கும் இங்கேயே நில்லு!
நான் சொன்னா, சொன்னதுதான். போய்யா...
ஏற்கனவே சொன்னேன்ல, சிறுசேமிப்புத் திட்டத்துல சேமிச்சா, வரியே போட வேண்டியிருக்காது-ன்னு... நீங்க கேட்கல...
அதான் 48 கோடி வரி போட்டியா? அம்மாவுக்கும் 48 வயசுதான் ஆகுது... உ வயசு கூடிட்டதா ஊர்ல நெனைச்சுக்கப் போறாங்க, போ!
நெடுஞ்செழியன்
சே! வாடிப் போச்சு, தூர எறி!...
வரி... வரி... பூவே வேணாம்னு வெறுத்துட்டா எப்படி? இந்தத் தாமரையைக் கையில வச்சுக்குங்க... உங்க பராசக்தி கோலத்துக்குச் செம்ம பொருத்தமா இருக்கும்!
பா. ஜ.க.




கல்கி

1994
ஏப்ரல் 3
மலர் : 52
இதழ் : 36
ஸ்ரீமுக
பங்குனி 21




# எதிர்க்கட்சித் தலைவர் ஜெயலலிதா!

ஆளுநர் உரை மீதான விவாதத்துக்குப் பதிலளித்துப் பேசிய முதல்வர் கெய்ன்ஸ் என்ற பொருளாதார நிபுணர் உதிர்த்த ஓர் அரசியல் பொன்மொழியை மேற்கோள் காட்டியது தவிர புதிதாக ஏதும் கூறவில்லை. வழக்கமான, 'மத்திய அரசு மீது பழி சுமத்து' பல்லவிதான்.

கெய்ன்ஸ் என்பவர் சொல்லியிருக்கிறாராம், ''அரசாங்கத்தின் கடமை ஏற்கெனவே மற்றவர்கள் செய்து கொண்டிருக்கிற பணிகளை அவர்களை விடச் சிறப்பாகவோ, மோசமாகவோ செய்வது அல்ல; இதுவரை யாருமே செய்யாத பணியை மேற்கொண்டு செய்வதுதான்'' என்று.

''அதனால்தான் தொட்டில் குழந்தைகள் திட்டம், அனைத்து மகளிர் காவல் நிலையம், புதிய வீராணம் திட்டம், காவல் துறையை நவீனப்படுத்தும் திட்டம், நெய்வேலி பழுப்பு நிலக்கரி கொண்டு மின்சாரம் தயாரிப்புத் திட்டம், கோயில் புனருத்தாரணத் திட்டம், பூஜை திட்டம் முதலியவற்றைத் தமிழக அரசு நிறைவேற்றி வருகிறது'' என்றார் ஜெயலலிதா.

முதல்வர் கூறாமல் விட்டுவிட்ட சிலவற்றையும் அவருக்கு நினைவு படுத்த விரும்புகிறோம். உலக வரலாற்றில் வேறு யாருமே செய்யாத காரியங்களான, தென்னை உயர கட்-அவுட் திட்டம், முழுப்பக்க விளம்பரங்கள் திட்டம், ஆயிரம் கார் பவனி திட்டம், பூக்தூவி வரவேற்கும் திட்டம், முதல்வர் தங்க, ஆங்காங்கே மாளிகைகளைப் புதுப்பிக்கும் திட்டம், போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்யும் திட்டம், விமானம் - ஹெலிகாப்டர் இரண்டுக்கும் ஒரே சமயத்தில் ஆர்டர் கொடுக்கும் திட்டம், மந்திரிகள் மூலமாக லட்சலட்சமாக வசூல் திட்டம், போஸ்டர் சட்டத்தை ஆட்சியும் ஆளும் கட்சியுமே மீறும் திட்டம், இலவச வேஷ்டி - சட்டை திட்டம், ஜெ. ஸ்டிக்கர் ஒட்டிய குடம் வழங்கு திட்டம், டான்ஸி நிலம் சுவீகாரத் திட்டம், மகாமகக் குளத்தில் பரஸ்பர அபிஷேகத் திட்டம், பள்ளி ஆசிரியர்களைப் பயிற்றுவிப்பதாகக் கூறி பல்லாயிரக்கணக்கானோரைப் பரிதவிக்கவிடும் திட்டம் போன்ற பல திட்டங்களும் இங்கேதான் ஏழைபாழைகளின் நலன் கருதி நிறைவேற்றப்பட்டு வருகின்றன. இதையெல்லாம் அந்த மகானுபாவன் கெய்ன்ஸ் வந்து பார்த்தாரானால் ஆச்சர்யம் தாங்காமல் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவார், நிச்சயம்!

மற்றபடி இங்கே மக்கள் எந்தவிதத்திலாவது அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் எனில் அதற்கெல்லாம் காரணம் மத்திய அரசுதானே தவிர, தாமோ, தமது ஆட்சியோ அல்லவே அல்ல என்பதைத் தெளிவாக்கிவிட்டார் ஜெ. இதற்காக 150 நிமிஷம் மூச்சுவிடாமல் பேசியிருக்கிறார்.

அரிசி விலை ஏறியிருக்கிறதா? மத்திய அரசின் வேலை. இருக்கட்டும். ஆனால், ரேஷன் கார்டிலும் எடையிலும் பண்டத்தின் தரத்திலும் எக்கச்சக்க மோசடி நடக்கிறதே அதற்கு யாரைப் போய்க் கேட்பது?

விடுதலைப்புலிகள் நடமாட்டமா? ராஜேஷ்பைலட்டைப் போய்க் கேளு. அவர்தான் கடற்படை அனுப்புவதாகக் கூறிக் கடைசியில் கை விரித்து விட்டார்; சரி. ஆனால், காவலிலிருக்கும் புலிகளே தப்புகிறார்களே, அதற்கு யாரை நோவது? கடலில் வேணுமானால் கடற்படை ரோந்து சுற்றலாம்; ஆனால் கடற்கரையோர நிலப்பகுதிகளில் அவர்கள் அத்துமீறி வரலாமா? அங்கே தமிழக போலீஸ்தானே செயல்பட வேண்டும்?

கோடை ஆரம்பமாகி அதற்குள் பவர்கட்டும் தொடங்கி விட்டதா? தொழிலகங்களும் தனி மனிதர்களும் அவதிப்படுகிறார்களா? மத்திய அரசு ஒத்துழைத்தால்தானே? அதனால்தான் மின் திட்டங்களில் மெத்தனம். ஓ.கே! ஆனால், இருக்கிற மின் நிலையங்களின் செயல்பாட்டினையாவது சீரமைக்கலாமே என்றால், மூச்!

போதாக்குறைக்குப் பணவீக்கம், டங்கல் திட்டம் போன்றவற்றையும் சேர்த்துக் கொண்டு மத்திய அரசை ஓர் எதிர்க்கட்சித் தலைவிபோல் பேசி ஒரு பிடி பிடித்திருக்கிறார் முதல்வர். ஆனால் ஆளும் கட்சித் தலைவர், முதல்வர் என்கிற முறையில் உருப்படியாக என்ன செய்திருக்கிறார் என்பது ஏழுமலைகளையும் ஏழுகடல்களையும் தாண்டி எங்கோ ஒளித்து வைக்கப்பட்டுள்ள மர்மம்!

தனித்துப் போட்டியிடத் தீர்மானித்து விட்டதை எதிர்க்கட்சித் தலைவர் ஜெயலலிதாவின் உரை நன்றாக உணர்த்துகிறது. தரமான ஆட்சி தருவதை அல்ல!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்



OUR RESPECTFUL HOMAGE "SHRADDHANJALI" TO
THE GREAT SAINT OF **SRI KANCHI SRI PARAMACHARYA SWAMYJI** WE MISS
YOUR PRESENCE, BUT YOU LIVE ON IN OUR WORKS,
OUR MINDS, OUR HEARTS AND OUR EVERY DAY WORLD!

ஸ்ரீ காஞ்சி பரமாசாரியார் ஸ்வாமிகளின் புண்ணிய ஸ்ம்ருதியாக-நினைவு அஞ்சலியாக ஒரு சில ஆதரவற்ற முதியோர்களின் பொருட்டு தனியாக ஒரு வ்ருத்தாச்ரமம்- Free Home for the Aged அமைக்க நவஜீவன் ஆச்ரமத்தின் சார்பாக முயற்சிகள் தொடக்கப்பட்டுள்ளன.

மேற்படி முதியோர்கள் இல்லம் மற்றும் பார்வையற்ற குழந்தைகளின் ஹாஸ்டல் பில்டிங் Permanent Shelter-ன் பொருட்டு பாம்பேயில் உள்ள கருணை உள்ளம் கொண்ட நவஜீவன் ஆச்ரமத்தின் ஆஸ்திக அன்பர்களின் விசேஷ ஆதரவுடன் கட்டிட நிதிக்காக கலைநிகழ்ச்சி மற்றும் ஹோமம் பூஜைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கலை நிகழ்ச்சி:

ஸ்ரீ குரவே நம:

Devotional Dance By Dr.பத்மா சுப்ரமண்யம். இடம்: பாரதிய வித்யாபவன் ஹால், சௌபாத்தி, பாம்பே. தேதி: 23.4.94 சனிக்கிழமை மாலை 6 மணி.

ஹோமம் பூஜை:

நவஜீவன் டோனர்களின் யோக க்ஷேமம் நலனை உத்தேசித்து-

''ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேச்வர யக்ஞம்''

இடம்: ஸ்ரீ சங்கர மடம், மாதுங்கா, பாம்பே.

தேதி:24.4.94, ஞாயிறு காலை 7 மணி முதல்.

அன்புடன் அழைக்கிறோம்:

பாம்பே மற்றும் அதன் சுற்றுப்புறத்தில் வசிக்கும் நவஜீவன் ஆச்ரமத்தின் ஆஸ்திக அன்பர்கள் மற்றும் இதர தமிழ் நண்பர்கள் மேற்படி இரண்டு நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டு ஸ்ரீ ஏழுமலையானின் அருள்பெற அன்புடன் அழைக்கிறோம்.

கலை நிகழ்ச்சி மற்றும் பூஜைகள் கலந்து கொள்ளும் பொருட்டு VIP Entry pass/Donor Card பெறுவதற்கு கீழ் குறிப்பிட்ட ஆஸ்திக அன்பருடன் தொடர்பு கொள்ளும்படி வேண்டுகிறோம். (Before 20th April 94)

Shri SKL Narasimhan
Co-ordinator, Navajeevan Ashram
2A/8 Mahadevi Co-op H&G Sociaty Pirmal Nagar. SV Road,
Goregaon West Bombay-400 062
Phone-87 45 880 Resi.

''யாதேவி சர்வ பூதேஷு தயாரூபேண ஸம்ஸ்திதா''

கருணை உள்ளம் கொண்டு தொடர்ந்து ஆதரவு அளித்து வரும் நவஜீவனின் ஆஸ்திக அன்பர்களுக்கு ''பவ'' வருட தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

நாராயண சேவையில்
K.S. ஆசார்யா

NAVAJEEVAN BLIND RELIEF CENTRE
(FREE HOME FOR THE BLIND AND AGED)
SAPTAGIRI ASHRAM, PO-TIRUCHANUR, TIRUPATI-517503

# சக்கரவர்த்தித் திருமகள்

'ஓகோ! பிதாமகருடைய அஸ்திரத்தால் கட்டுண்டேன்' என்று மாருதி உடனே தெரிந்து கொண்டான்.

பிரம்மாவிடம் மாருதியும் வரம் பெற்றிருந்தான். அப்போது அதை நினைவுக்குக் தந்து கொண்டான். 'ஒரு முகூர்த்த நேரமே இது என்னைக் கட்டி நிற்கும். இதனால் எனக்கு யாதொரு ஆபத்துமில்லை. கட்டுப் பட்டு நிற்கும் காலத்தில் அரக்கர்கள் என்ன செய்வார்கள் பார்க்கலாம். தூதனாக வந்த என் வேலை ஒருவேளை இதனாலேயே பூர்த்தியாகும்' என்று யோசித்து, பிதாமகன் தனக்குச் சிரஞ்சீவி வரம் தந்தபோது 'அவன் இட்ட ஆக்ஞையின்படி பிரம்மாஸ்திரத்துக்கு அடங்கித் தைரியமாகவும் செயலற்றும் தரையில் விழுந்தபடி கிடந்தான்.

ஹனுமான் கீழே விழுந்து செயலற்றுக் கிடக்கிறான் என்பதைக் கண்டதும் அதுவரையில் பயந்து தூர நின்ற அரக்கர்கள் எல்லாரும் அவனைச் சுற்றிக் கொண்டார்கள். மாருதியைத் தாறுமாறாகத் திட்டிப் பேரிரைச்சலிட்டுக் கொண்டும், தங்களுடைய ராஜகுமாரனைப் புகழ்ந்தும் கூத்தாடினார்கள்.

"துண்டு துண்டாக வெட்டுவோம்! தின்று விடுவோம்! ராவணனிடம் இழுத்துப் போவோம்!" என்று பலவாறாகக் கூச்சலிட்டார்கள்.

பிறகு சிலர், "இவன் பாசாங்கு செய்வான். திடீர் என்று கிளம்பி நம்மைத் தாக்குவான்" என்று பயந்து சணல் கயிறும் தென்னங் கயிறும் கொண்டு வந்து ஹனுமானை நன்றாகக் கட்டிவிட்டு, "கட்டிவிட்டோம். இழுத்துப் போகலாம், ராவணேசுவரனண்டை" என்று அவர்கள் மிக மகிழ்ந்து கூச்சலிட்டார்கள்.

ராக்ஷசக் கூட்டம் இப்படிச் செய்வதைத் தடுக்க அவகாசம் பெறாத இந்திரஜித் மிக வருத்தப்பட்டான்.

'ஐயோ நான் செய்தது வீணாகப் போயிற்றே! இந்த மூடர்களுக்கு மந்திர ரகசியங்கள் தெரியவில்லை. இப்படி இவர்கள் கயிறும் சாக்குப் பைகளும் போட்டுக் கட்டியபின் பிரம்மாஸ்திரத்தின் சக்தி ஒழிந்து போயிற்று. ஸ்தூலப் பொருள்களால் கட்டியபின் மந்திரக் கட்டு தானாக அவிழ்ந்து போயிற்று. ஹனுமான் நாரும் கயிறும் போட்டுக் கட்டிய கட்டுகளை ஒரு கணத்தில் அறுத்து எறிந்து எழுந்து விடுவான். மறுபடி பிரம்மாஸ்திரம் பிரயோகிக்க முடியாது' என்று எண்ணி வருத்தப்பட்டான்.

மாருதியும் நிலைமையை அறிந்து கொண்டான். பிரம்மாஸ்திரத்தின் கட்டு நீங்கிப் போயிற்று என்றும் கயிறுகளால் கட்டப்பட்டதுதான் மிச்சம் என்றும் அதைத் தன் தேகபலத்தால் ஒரு கணத்தில் விலக்கிக் கொள்ளலாம் என்பதையும் உணர்ந்தான். ஆனபோதிலும் தன்னைக் கட்டியிழுத்துச் செல்லட்டும், ராவணனைக் கண்டு பேச அவகாசம் ஏற்பட்டது என்று நிச்சயித்து, வேண்டுமென்று பேசாமல் அவர்கள் செய்த கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு செயலற்றே இருந்தான். அடித்தார்கள், திட்டினார்கள், ராக்ஷச ஸ்திரீகளும் பாமரர்களும் பரிகாசம் செய்யத் தெருவழியாக இழுத்துச் சென்றார்கள்.

## 74. லங்கா தகனம்

பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்ட ஹனுமான், தான் பெற்ற வரத்தால் அந்த அஸ்திரத்தினின்று விடுதலையடையும் வரையில் ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டும் என்று தீர்மானித்து அரக்கப் பாமரர்கள் திட்டுவதையும் அவமானப்படுத்துவதையும் இம்சிப்பதையும் பொறுமையுடன் தாங்கிக் கொண்டே சென்றான்.

ராவணனுடைய சபையில் அரசன் முன் அவனைக் கொண்டு போய் நிறுத்தினார்கள். தான் பட்ட துன்பமும் அவமானமும் போக, ராவணனைக் கண்டதும் சீதைக்கு ராவணன் செய்த தீமையை நினைத்துப் பெருங்கோபம் மேலிட்டது. திவ்விய ஆபரணங்களும் பட்டுப் பீதாம்பரமும் கிரீடமும் பூண்டு, கண் கூசும் எழிலுடன் ராவணன் அமர்ந்திருந்தான். தங்கம், ரத்தினம், வைடூரி

ராஜாஜி



யம், முத்து, பட்டு இவற்றின் பிரகாசம் சபை முழுவதும் நிறைந்தது. ராஜ லக்ஷணங்களுடன் விளங்கிய அவன் கறுத்த மேனி தேஜஸ் கொண்ட ஒரு மலை போல் காணப்பட்டது.

''ஆஹா! இந்த மகான் தருமத்திலிருந்து பிறழாமல் சன்மார்க்கத்தில் நின்றிருந்தானாகில் இவன் ஐசுவரியம் எவ்வாறு இருந்திருக்கும்! இந்திரன் முதலியவர்கள் அனைவரும் இவனுக்கு ஈடாக மாட்டார்கள். என்ன வடிவம்! என்ன எழில்! என்ன பலம்! தான் பெற்ற வரங்களை நம்பித் துஷ்ட காரியங்களில் இறங்கிவிட்டு அல்லவோ இவன் தன் பாக்கியத்தையும் மேன்மையையும் இழந்தான்!'' - இவ்வாறு கோபமும் வியப்பும் இரக்கமும் கொண்டு ஹனுமான் யோசித்துக் கொண்டிருக்கையில் ராவணன் மந்திரிகளைப் பார்த்து உத்தரவிட்டான்.

''இந்தத் துஷ்டன் யார்? எங்கிருந்து வந்தான்? யார் இவனை அனுப்பியது? இந்த லங்



கைக்குள் ஏன் பிரவேசித்தான்? உண்மையைச் சொல்லும்படி கேளுங்கள்!'' என்றான்.

மன்னன் உத்தரவிட்டபடி மந்திரி பிரஹஸ்தன் ஹனுமானைப் பார்த்து, ''குரங்கே! பயப்பட வேண்டாம்! உண்மையைச் சொன்னால் தப்பிப் போவாய். இந்திரன் உன்னை அனுப்பினானா? அல்லது நீ குபேரனுடைய ஆளா? அல்லது வேறு யார் உன்னை ஏவியது? உண்மையைச் சொல்லிவிட்டுத் தப்பித்துக் கொள். நீ ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டு இங்கு வந்திருக்கிறாய்? மறைக்காமல் சொல்!'' என்றான்.

இவ்வாறு பிரஹஸ்தன் நல்ல வார்த்தைகளாகச் சொல்லிக் கேட்டான். ஹனுமான் மறுமொழியாக ராவணனைப் பார்த்துச் சொன்னான்:

''இந்திரனாவது குபேரனாவது என்னை அனுப்பவில்லை. நான் வானரன். ராக்ஷஸ ராஜனைப் பார்க்க விரும்பி வந்தேன். அதற்காகவே வனத்தை அழித்தேன். என்னைக் கொல்லப் பிறர் தாக்கினபடியால் அவர்களை நான் வதம் செய்தேன். வானர ராஜன்



சுக்ரீவனுடைய தூதனாக நான் இங்கே வந்திருக்கிறேன். அரக்கர் மன்னனே! என் அரசன் தங்களைச் சகோதரனாகப் பாவித்து க்ஷேமம் விசாரிக்கிறார். அயோத்தி மன்னன் தசரதனுடைய புகழ் பெற்ற குமாரன் ராமசந்திரனும் வானர ராஜனும் நட்பு செய்து கொண்டிருக்கிறார்கள். சுக்ரீவனுடைய பகைவனான வாலி, ராமசந்திரனால் வதம் செய்யப்பட்டான். வானர ராஜ்யப் பதவியை சுக்ரீவன் அடைந்திருக்கிறான். அயோத்தியாதிபதியாக வேண்டிய ராமசந்திரன், தந்தை வாக்கை மேற்கொண்டு, தண்டகாரண்யத்தில் வனவாசம் செய்து கொண்டிருந்த காலத்தில் அங்கே தனியாக இருந்த அவருடைய தேவியைக் காணாமல் ராம லக்ஷ்மணர்கள் அவளைத் தேடி வந்தார்கள். சுக்ரீவ ராஜாவின் நட்பை அடைந்து அவன் சகாயத்தைக் கோரினார்கள். வானர ராஜன் தன் ஆட்களை பூவுலகம் முழுவதும் தேடிப் பார்க்க அனுப்பினான். லங்கையில் தேட நான் வந்தேன். புண்ணியவதி ஜானகியை இவ்விடம் நான் கண்டேன். ராக்ஷசேசுவரனாகிய தங்களுக்குச் சகோதர அரசனுடைய தூதனாகிய நான் வணக்கமாகச் சொல்லுகிறேன். சக்கரவர்த்தித் திருமகனுக்காகவும் சொல்லுகிறேன்.

''ஸீதா தேவியை அபகரித்துத் தூக்கி வந்தது தருமத்துக்கு விரோதம் என்பது தங்களுக்குத் தெரியும். உம்முடைய குல நாசத்துக்கு இது காரணமாகும். ரகுவீரனையும் வானரர்களையும் பகை செய்து கொண்டு அழிந்துபோக வேண்டாம். சீதையை மரியாதையாக ரகுவீரனிடம் ஒப்புவித்துச் சரணமடைவீராக. விஷத்தை உணவாக எண்ண வேண்டாம். சீதையை உம்முடைய அழிவுக்காக வந்த காலனாக அறிவீராக. புத்திமான்கள் தருமத்துக்கு விரோதமான காரியங்களில் அகப்பட்டுக் கொண்டு பெரிய அபாயத்துக்கு ஆளாக மாட்டார்கள். பிறர் மனைவியை விரும்பும் பாபம் ஒருவனை வேரோடு அழித்து விடும் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். பாப காரியத்தால் தாங்கள் முன் செய்த தவமெல்லாம் அழிந்து பயனற்றுப் போகும். பிழை செய்து பெரும் பாக்கியத்தைக் கெடுத்துக் கொண்டீர். இப்போது உமக்குள்ள வழி ராமனிடம் சரண்புகுவது ஒன்றே. ராமனைப் பகைத்துக் கொண்டு உம்முடைய நாசத்தைத் தேடிக் கொள்ள வேண்டாம். நீர் பெற்ற வரங்கள் ரகுவீரனுக்கு எதிரில் ஒன்றும் பயன்படாது. யோசித்துப் பார்த்து உண்மை ஆபத்தை அறிந்து கொள்வீராக. வானர ராஜனுடைய தூதனாகிய நான் சொன்னதை மதித்து நல் வழியில் சென்று பிழைப்பீராக. நான் சொன்ன வார்த்தைகள் உம்முடைய சகோதரன் சுக்ரீவனுடைய தூதனாக, உம்முடைய நன்மைக்காகச் சொன்ன உண்மை வார்த்தைகள்.''

தைரியமே உருவெடுத்தவனான ஹனுமான், அரக்கனுக்கு விஷம்போல் தோன்றும் இந்த உபதேசத்தை மிக்க தெளிவான மொழிகளில் செய்தான். அதைக் கேட்ட அரக்கனுக்குக் கோபம் பொங்கிக் கண்கள் சிவந்தன.

ரோஷாவேசத்தில் ''இவனைக் கொன்று விட்டு மறு வேலை பார்ப்பீர்களாக'' என்றான்.

தூதனைக் கொல்வது தவறாகும் என்று சபையிலிருந்த விபீஷணன் சொன்னான். ''தூதர்களைக் கொல்லுவது கூடாது என்று ராஜ நீதி அறிந்தவர்கள் அனைவரும் சொல்லி வருவதால் இதைச் செய்ய வேண்டாம். அங்கஹீனம் செய்யலாம். கசையடி கொடுக்கலாம், சூடு போட்டு விடலாம், மரண தண்டனை மட்டும் வேண்டாம்'' என்று விபீஷணன் யோசனை சொன்னான்.

''பாபகாரியம் செய்தவனைக் கொல்வதில் என்ன தவறு?'' என்று கேட்டான் ராவணன்.

''அப்படியல்ல. இவன் என்ன குற்றம் செய்தவனாக இருந்தாலும், அது பிறருடைய ஏவலினால் செய்யப்பட்டது. அவர்களை விட்டு விட்டு வெறும் கருவியாக வந்த ஒரு சாரனையோ தூதனையோ பிடித்துக் கொல்வதில் ஒரு பயனுமில்லை. இவனை யார் அனுப்பினார்களோ அவர்களைத் தண்டிப்பதற்கு வழிதேடுவீராக. இவன் உயிருடன் திரும்பிப் போய்ச் சொன்னால் அவர்கள் வந்து நம்மைத் தாக்குவார்கள். அப்போது அவர்கள் சரியான தண்டனையை நம்முடைய பலத்தால் அடைவார்கள். அற்பமான ஒரு சாரனைக் கொல்வதில் ராஜ தருமத்திலிருந்து தவறினது ஒன்றே நிற்கும்'' என்றான் விபீஷணன் வினயமாக.

இந்த யோசனையை ராவணன் ஒப்புக் கொண்டான். ''சரி, வானரத்துக்கு முக்கியமான லட்சணம் அதன் வால். இவன் வாலைக் கொளுத்தி அடித்துத் துரத்தி விடுங்கள்'' என்றான்.

(தொடரும்)

# சூர்யா

பாலகிருஷ்ணா ஹீரோ. வால்போஸ்டரில் எங்கேயாவது இவர் தென்பட்டால் அதிர்ஷ்டம். விஜயசாந்திதான் உருட்டுக் கட்டையோடு காட்சியளிக்கிறார்.

தெலுங்கு டப்பிங் என்றால், நிச்சயம் ஹீரோயின் பெயர் பாரதி தான். அதேபோல் தொழிலாளர் போராட்டமும் ஃபேமஸ். கடைசியில் ஹீரோ, முதலாளியைக் கொன்று தொழிலாளர்களைப் புளகாங்கிதப் படவைப்பார். நடுவில் அவர் தங்கை கற்பழிக்கப்படுவாள்; தாயார் செண்டிமெண்டாய் டச் பண்ணுவார். இடையிடையே ஹீரோ-ஹீரோயின், வெளிநாட்டுப் புல் தரை, பாலம், ஃபவுண்டன் எல்லாம் சுற்றிப் பாடுவார்கள்.



சூர்யாவும் மேற்சொன்ன தெலுங்குப் புகழ் காக்கிறது. பாலகிருஷ்ணா மறந்து போய்க் கூடச் சிரிக்கவில்லை. நடிக்கவும் இல்லை. கட் பனியன் போட்டு நிறைய சண்டை போடுகிறார். மற்றபடி கட் - அவுட் பொம்மை.

லட்சுமி, சுஜாதா, கஸ்தூரி என்று நம்ம ஊர் முகங்களும் உண்டு. அம்ரிஷ்பூரி வில்லன். ஹிந்தியிலிருந்தும் 'டப்' பண்ணிவிடும் எண்ணம் போலும்.

உண்மை உழைப்பு, ஆர்ட் டைரக்டருடையதே. சுரங்கம் உடைந்து வெள்ளம் வரும் காட்சிகள் தத்ரூபம். காமிராவையும் கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம்.

'டம்டம், டும்டுமா, டுண்டுனா டுன், ஜனா ஜனா, ஜம்,ஜம்' — என்ன அர்த்தம் என்று பாடலாசிரியர் முத்துலிங்கம் விளக்கினால் கோடி புண்ணியம். பப்பிலஹரி இசை. இடத்திற்கேற்றாற் போல் எப்படி இசை அமைக்கக் கூடாது என இவரிடம் தாராளமாய் டியூஷன் கற்கலாம்.

தெலுங்கில் படம் பயங்கர ஹிட்டாம். அங்கே ரசிகர்கள் எப்படி இதையெல்லாம் பார்க்கிறார்கள்? நம் நிலைமை, இடைவேளைக்கு மேல் அம்புப் படுக்கை. ஒரே ஆசுவாசம். தியேட்டர் வாசலை மூடுவதில்லை. தாராளமாய் ஓடிவந்து விடலாம், கொடுத்த பத்து ரூபாயைத் தலை முழுகி விட்டு.

- துளசி

ஒரு லட்சியம், அதை அடையும் ஆர்வம், அதற்கான உழைப்பு, வைராக்கியம்... வெற்றியின் பின்னணியில் இருப்பவை இவை. தவிர, தேவைப் படும் நிதியுதவியைப் பெறும் வாய்ப்பும் அவசியம்.

# வெற்றி பெறுவோருக்கே வாய்ப்புகள் கூடுகின்றன!



| வ. எண் | சீட்டின் மதிப்பு ரூ. | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1. | 250 × 40 = 10,000/- | 3 கிராம் வெள்ளிக் காசு |
| 2. | 500 × 30 = 15,000/- | மூடியுடன் கூடிய எஸ்.எஸ். டோப் |
| 3. | 625 × 40 = 25,000/- | எஸ்.எஸ். லஞ்ச் செட் |
| 4. | 500 × 60 = 30,000/- | எச்.எம்.எஸ்.எஸ். அலுமினியம் கிலாடட் மல்டிபாட் |
| 5. | 1,000 × 50 = 50,000/- | காளி கடாய் (C.B.) |
| 6. | 1,250 × 60 = 75,000/- | எஸ்.எஸ் உருளி (C.B. பெரியது) |
| 7. | 1,500 × 60 = 90,000/- | பிரஸ்டீஜ் பிரஷ்ஷர் பான் (மூடியில்லாமல்) |
| 8. | 2,500 × 40 = 1,00,000/- | காளி ஸ்டு பாட், மூடியுடன் (C.B.) |
| 9. | 5,000 × 40 = 2,00,000/- | எச்.எம். அலுமினியம் கிலாடட் ஃப்ரை பான் |
| 10. | 7,500 × 40 = 3,00,000/- | 2 கிராம் தங்கக்காசு |
| 11. | 20,000 × 25 = 5,00,000/- | 4 கிராம் தங்கக்காசு |

சீட்டு விழா முடிவு தேதி 14 ஏப்ரல், 1994.








# 'தொடுப்பு'



'அப்பாவுக்குத் திடீரென்று உடம்பு முடியாமல் போய்விட்டது. நிதானம் தப்பி இரண்டு நாளாகிவிட்டது. உடனே புறப்பட்டு வந்தால் நல்லதுன்னு அம்மா சொல்றாங்க!'

ஊரிலிருந்து தம்பி எழுதியிருந்த கடிதத் தகவல் மூளைக்குள் பதிவானதுமே தயாளனின் மனசு திக்கென்றாகிவிட்டது.

'என்னது..உடம்பு முடியலையா..! அப்பாவுக்கா..?'

'ம்ஹூம்...' மனசு நம்ப மறுத்து அடம்பிடித்தது.

நினைவு தெரிந்த நாள் முதல் அப்பா உடம்பு முடியாமல் படுத்தார் என்று பார்த்ததே இல்லை.

வயதை அலட்சியப்படுத்திவிட்டு 'கல்லுக்குண்டாட்டம்' இருந்த அப்பாவுக்கு திடீரென்று எப்படி உடம்பு முடியாமல் போகும்...? அதுவும் நினைவு தப்பும் அளவிற்கு?

''சரி சரி, பதற்றப்படாதீங்க..வயசு எழுபத்தைஞ்சுக்கு மேலாவுதுல்லே...?'' அவனது படபடப்பைப் பார்த்து சமாதானப்படுத்த முயற்சி செய்த மனைவி மீரா, தயாளன் பார்த்த பார்வையில் சாம்பலாகிப் போகாமல் தப்பித்ததே ஆச்சரியம் தான்.

'ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக லெட்டரைக் கொடுத்தது மடத்தனம்.' மீரா தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

அவன் அப்படியே சோர்ந்துபோய்த் தரையில் உட்கார்ந்து விட்டான்.

மீரா ஏராளமான தயக்கங்களுடன் அவனை நெருங்கி, தோளைத் தொட்டாள். அந்தத் தொடுதலில் அளவுக்கு மீறிய மிருதுத் தன்மை.

''நாளைக்கு லீவு போட்டுட்டு எல்லாருமா... காலைலே போற 'கம்பன்'லே புறப்பட்டுப் போகலாம்.''

திடுக்கிட்டவன் போல அவளைத் திரும்பிப் பார்த்தான்.

''ம்ஹூம்... நீ வேணா பசங்களை அழைச்சுக்கிட்டு நாளைக்கு வா... நான் இப்பவே புறப்படறேன்...''

## உத்தமசோழன்

''இப்பவேவா..இன்னேரம் எல்லா ட்ரெய்னும் போயிருக்குமே. திருவள்ளுவர்லே இடம் கிடைக்காதே...'' நாக்கு நுனி வரை வந்த வார்த்தைகளை அவசரமாகத் தடுத்து நிறுத்தினாள் மீரா.

கழற்றிய சட்டையையே அவசர அவசரமாக மீண்டும் போட்டுக் கொண்டான். பைக்குள் பணம் இருக்கிறதா என்று மட்டும் பார்த்துக் கொண்டான்.

'சரி... இவனை இனித் தடுத்து நிறுத்த முடியாது. சாப்பிடக்கூட இல்லையே.. ஒரு தம்ளர் பாலாவது...' அவசரமாய் உள்ளே ஓடி, பாலோடு வெளியே வந்தவளின் காதுகளுக்கு, தடதடவென்று தயாளன் படியிறங்கிப் போகும் சத்தம் மட்டுமே கேட்டது.

தயாளனின் மனசு முழுக்க அப்பாதான் நிறைந்திருந்தார். மேட்டூர் மல்லில் தைத்த கையில்லாத பனியன். எட்டு முழ வாயில் வேட்டி. வெள்ளை வெளேரென்று தேங்காய்ப் பூத்துண்டு. பெரும்பாலும் மடித்துக் கட்டிய வேட்டியுடன் இருபுறமும் பித்தளைப் போட்ட மூன்றடி நீள பிரம்புக் கழியைச் சுழற்றியபடியே சதாசர்வ காலமும் எக்கல் கிராமத்தின் வயல் வரப்பெல்லாம் கம்பீர நடை நடந்து செல்லும் அப்பா.

மழைக் காலங்களில் கரை ததும்ப ஓடிக் கொண்டிருக்கும் வளவனாறு 'எந்த நேரத்திலும் உடைத்துக் கொண்டு ஊருக்குள் நுழைந்துவிடும்' என்ற ஆபத்தான சமயங்களில் அடுத்த ஊர்க்காரன் இந்தப் பக்கத்துக் கரையை வெட்டிவிட்டால் என்ன செய்வது..?' என்ற எச்சரிக்கையோடு, பத்து பன்







"கட்டினா எதிர்வீட்டுப் பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு ரெண்டு நாளா என் பையன் ஒத்தைக் காலில் நின்னான்!"

"அப்புறம் என்னாச்சு?"

"அதுக்கு மேல முடியாம கால் வலிக்குதுன்னு உட்கார்ந்துட்டான்!"

- கொங்கணாபுரம் வே. செந்தில்

---

ளிரண்டு ஆட்கள் தோளில் தொங்கும் மண் வெட்டிகளோடு பின்தொடர, தலையில் கட்டிய முண்டாசோடு மழைத் தாரைகளை அலட்சியப்படுத்தி கர்மவீரனாய் நடந்து செல்லும் அப்பா.

ஆத்திரத்தில் ஏதோ கெட்ட வார்த்தை சொல்லித் திட்டிவிட, 'இவனை உதைக்காமல் விடக்கூடாது' என்று திரண்டு வந்த கோபக்காரக் கூலி ஆட்கள் கூட்டத்தின் முன், 'ஓகோ... அந்த அளவுக்கு வந்தாச்சா.. இதோ..நான் தனியாத்தான் நிக்கிறேன். முடிஞ்சா அடிக்கப் பாரு...' என்று சிவப்பேறிய கண்களுடன் சிங்கமாய் சிலிர்த்து நின்று, அவர்களைத் திகைக்க வைத்த அப்பா...

அவன் ஐந்தாவது படித்துக் கொண்டிருந்த போது ராத்திரி நேரத்தில் வாசலில் உட்கார்ந்திருந்த சமயம், 'என்னமோ கருக்குன்னு கடிச்சுடுச்சு அப்பா.. விருவிருன்னு கடுக்குதுப்பா...' என்று சொன்னதுதான் தாமதம். அப்படியே அவனைத் தூக்கித் தோளில் போட்டபடி லொங்கு லொங்குகென்று ஒரு நிமிஷம்கூட நிற்காமல் மூன்று மைல் தூரம் ஓட்டமாய் ஓடி 'பாண்டி'யிலிருந்த ஹோமியோபதி டாக்டரிடம் காண்பித்ததும் 'பயப்படாதீங்க... ஒண்ணுமில்லே...' என்று அவர் சொன்னதும் 'அப்பாடா... என்னமோ ஏதோன்னு பயந்திட்டேன்'னு நிம்மதிப் பெருமூச்சு விட்ட பாசமுள்ள அப்பா...

அவனறிந்த அப்பா இப்படித்தான்.

இதைத் தவிர பாயும் நோயும் கிடக்கும் அப்பாவை அவனால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

**வீ**ட்டு வாசலை மிதித்ததும் முதலில் பார்த்தது அம்மாதான்.

"அட.... பெரிய தம்பியா...! வாப்பா..." ஆச்சரியமும் மகிழ்ச்சியுமாய்.. உள்ளே திரும்பி, "தம்பி... அண்ணன் வந்தாச்சுடா...!" என்றாள்.

"அப்பாவுக்கு எப்படிம்மா இருக்கு...?"

"உள்ளே வந்து பாரு...!"

முன்கொட்டகையின் இடது ஓரமாய் ஜமுக்காள மறைப்பில் பனை அகனியால் பின்னப்பட்ட கட்டிலில் சுருண்டு கிடந்தார் அப்பா.

பார்க்கவே சகிக்கவில்லை. தாடி மீசையுடன் இளைத்துக் கருத்துப் போயிருந்தார்.

'சர்ரென்று' சத்தம். அப்பாவின் கட்டிலின் கீழே ஊற்றியது. அம்மா அவசரமாய் ஒரு மண் சட்டியை நகர்த்திப் பிடித்தாள்.

தயாளன் அதிர்ந்து போனான்.

"என்னம்மா... இது... இந்த அளவுக்கு நிதானம் தப்பிப் போச்சு...!"

"ஆமாப்பா..மலஜலம் எல்லாமே... இப்படித்தான்..." சொல்லிக் கொண்டே வேறு ஒரு வேட்டி எடுத்து வந்து மாற்ற முற்பட்டாள். தயாளன் அதை வாங்கிக் கொண்டான்.

"வேணாப்பா... உனக்கெதுக்கு சிரமம்..?"

"சிரமமா...!"

அப்பாவுக்கு வேட்டி மாற்றியபோது அவர் விழித்துக் கொண்டார். எழுந்திருக்க முற்பட்டார். அவன் அவர் கையைப் பிடித்து தூக்கி உட்கார வைத்தான். அருகில் உட்கார்ந்து கொண்டான்.

"அப்பா..!"

"ஹூம்..?"

"பெரிய தம்பி வந்திருக்கேன்!"

அப்பா அவனை அப்படித்தான் கூப்பிடுவார்.

"பெரியதம்பியா..யாரது..?"

குபீரென்று மனசு முழுக்கப் பரவிய வலி.

"உங்க பெரிய மகன்பா.. தயாளன்.. மெட்ராஸிலிருந்து வந்திருக்கேன்..."

'அடையாளம் கண்டுகொள்ள மாட்டாரா..?' என்ற தவிப்பு. "பெரிய மகனா..!" அவர் பேந்தப் பேந்த விழித்தார்.

பொங்கி வந்த அழுகையை அடக்க முடியாமல் தோற்றுப் போனான்.

"இப்படித்தாம்பா.... யாரையும் தெரியலே... எங்கேயிருக்கோம்.. என்ன செய்யறோம்னு தெரியலே... டாக்டர் வர்றாரு... ஊசி போடறாரு... ம்ஹூம்... ஒரு பிரயோசனமும் இல்லை.

அம்மாவின் கண்கள் பளபளக்கத் தொடங்கின. உதடுகள் கோணிக் கொண்டன.

தயாளன் அப்பாவை விட்டு இங்கே அங்கே நகரவில்லை. வந்ததிலிருந்து அருகிலேயே இருந்தான். அவர் லேசாக அசைந்தால் கூட "என்னப்பா..என்ன வேணும்.." என்று தவித்தான்.

அந்தத் தவிப்பு ஒரே ஒரு தடவையாவது தன்னை அடையாளம் கண்டு கொண்டு

'யாரு... பெரியதம்பியா..!' என்று கேட்டுவிட மாட்டாரா என்ற ஏக்கம்.

அப்பாவுக்குத் துணி மாற்றுவது, குளிப்பாட்டுவது, அவரது இயற்கை உபாதைகளுக்கு உதவுவது, எல்லாமே அம்மாதான். மகனையோ, மருமகளையோ யாரையும் துணைக் கழைப்பதில்லை.

''நானிருக்கறப்போ இன்னொருத்தர் எதுக்கு...?''

அம்மா சிரித்துக் கொண்டே சொல்வாள். அப்பா செய்து வைக்கும் அசிங்கங்களைக் கண்டு கொஞ்சமாவது முகம் சுளிக்க வேண்டுமே...

மனம் நெகிழ்ந்து அம்மாவையே பார்த்துக் கொண்டிருந்தான் தயாளன்.

அவனறிந்து அந்த ஊரில் அப்பா, அம்மாவைப் போல் ஒரு பொருத்தமான ஜோடி கிடையாது. எந்த ஒரு நல்லது கெட்டது என்றாலும் அம்மா இல்லாமல் அப்பா போனது கிடையாது.

எப்போதாவது அவர்களுக்குள் பிணக்கு வரும். ஒரு நாள் முழுக்க பேசிக் கொள்ள மாட்டார்கள். எதனால் இந்தப் பிணக்கு என்று யாருக்கும்தெரியாது. இருவரும் பேசிக் கொள்வது இவன் மூலமாகத்தான்.

ஆனால் மறுநாளே 'சௌந்தரம்...' என்றும் 'என்னங்க...' என்றும் அவர்களுக்கிடையே இயல்பு நிலை திரும்பிவிடும்.

அவர்களது அந்நியோன்னியம் மற்றவர்களை ஆச்சரியப்படவைக்கும். சிலரை, பொறாமைப்பட வைக்கும்.

**ப**டுத்திருந்த அப்பா திடுக்கென்று எழுந்து கொண்டார்.

''நாகம்மா...நாகம்மா..''

அம்மா அருகில் ஓடினாள்.

''என்னங்க...''

அவர் வெறித்துப் பார்த்தார்.

மறுபடி கட்டிலில் சுருண்டார்.

ஏமாற்றம் அவர் முகத்தில் தெரிந்ததோ?

தயாளனுக்கு அதிர்ச்சி.

'நாகம்மாவா...! யாரது...?'

தம்பி விளக்கம் சொன்னான்.

''அப்பாவோட அந்தக் கால 'தொடுப்பு'... நமக்கெல்லாம் தெரியாத விஷயம். கூலி வேலை செய்யும் ஒரு வாழாவெட்டி பொம்பிளையாம். இப்போ எங்கே இருக்காளோ... என்னமோ... அவளைத்தான் கூப்பிடறாரு...''

'ச்சே... அப்பாவா... இப்படி! இந்த அம்மாவை மீறி இன்னொருத்தியை நினைக்கப் பார்க்க இவரால எப்படி முடிஞ்சது...'

நினைக்க நினைக்க ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அவனுக்கு ஒரே நொடியில் அப்பா கசந்து போனார். மனசு முழுக்க கட்டுப்படுத்த முடியாத வெறுப்பு.

பனி கொட்டும் அந்த இரவில் தெருவின் கடைக்கோடி வரை சென்று வடிகால் மதகில் நெடுநேரம் உட்கார்ந்துவிட்டு வடியாத ஆத்திரத்துடன் மனசில்லாமல் திரும்பினான்.

ஊர் அடங்கிவிட்டது.

வீட்டிற்குள் நுழைந்தால் விடிவிளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அப்பாவின் கட்டிலில் சாய்ந்தபடி அம்மா சத்தமில்லாமல் அழுது கொண்டிருந்தாள்.

திடுக்கிடலுடன் அம்மாவைத் தொட்ட போது...

அவள் மேலும் குலுங்கினாள்.

''ஏம்மா அழறே.. எல்லாமே மறந்து போன அவர், எவளையோ மட்டும் கரெக்டா ஞாபகம் வச்சுக்கிட்டுப் பேசறாரேன்னு நினைக்கிறயா... அவர் செஞ்சது தப்புன்னு நெனைச்சு, அந்தக் குற்ற உணர்ச்சியால கூட அவ பெயரை நெனைச்சிருக்கலாமில்லையா?'' என்றான், ஆறுதலாக.

நீர் நிறைந்த கண்களுடன் அம்மா அவனை ஏறிட்டாள்.

''இல்லேப்பா... நீ சொல்ற மாதிரி எல்லாமே மறந்துபோன அவருக்கு 'அவ' ஒருத்தி மட்டுமே நினைப்புலே இருக்கான்னா என்ன அர்த்தம்..? அந்த அளவுக்கு அவரு மனசிலே அவ பதிஞ்சு போயிருக்கான்னு அர்த்தம். அந்த மாதிரி 'அவ' அவர்கிட்ட நடந்திருக்கான்னு அர்த்தம். அவ மாதிரி நமக்கு நடந்துக்கத் தெரியாமே போச்சேன்னு நினைக்கிறப்ப ஆத்திரமும் அழுகையுமா வருதுப்பா...''

இப்படிச் சொல்லிவிட்டு மேலும் பொங்கிப் பொங்கி அழும் அம்மாவை ஓர் அதிசயம் போல் பார்த்தான் தயாளன்.

---

''ஏன் இப்படி, 'இது பி-2 போலீஸ் ஸ்டேஷனில் திருடப்பட்டது'ன்னு துப்பாக்கிமேல் பொறிச்சிருக்கு?''

''ஹி... ஹி... இங்கே கொஞ்சம் திருட்டு பயம் அதிகம் சார்...!''

- வேதபுரி எஸ். ரமேஷ்






## 13

*மலர்களின் பெயர்கள்*
*தெரிவதற்குள்*
*தோட்டம் போச்சு.*

– ஒரு ஹைக்கூ.

**எ**ன் மாமனார் மிஸ்டர் ஹரிஹரன் என்னிடம் மிகுந்த பாசமாக இருந்தார். வாஸ்தவம். அது இவ்வளவு பெரிய பிரச்னையைக் கிளப்பும் என்று எனக்குத் தெரிந்திருக்கவில்லை. மாமியார் பிரேமாவுக்குக் கொஞ்சம் ஆர்த்தரைட்டிஸ் ப்ராப்ளம் இருப்பதால், காலை நான்தான் எழுந்து எல்லோருக்கும் காப்பி போடும் வழக்கம். அப்போது மாமனார் சமையல் அறையில் வந்து விசாரிப்பார். அவருக்கு பேப்பர் படித்துக் காட்டச் சொல்வார். கண்ணாடி சரியில்லை; மாற்ற வேண்டும் என்ற காரணத்துக்காக என்னைப் படித்துக்காட்டச் சொல்வார். அப்புறம் சில தினம் வாக் போவார். சில தினம் போகமாட்டார். அர்ஜுனுக்கும் அவருக்கும் அதிக பேச்சுவார்த்தை இல்லை. என்னிடம்தான் அதிகம் பேசினார். "நீ எனக்கு மகள் போல! கோயமுத்தூர் காயத்ரியும் நீயும் சமானம்!" என்றார்.

எனக்கு அதில் எல்லாம் விபரீதம் இருப்பதாகப் படவே, உரைக்கவே இல்லை. ஆனால் ஒரு முறை மாமியார் என்னிடம் வந்தார். பெரியவர் வெளியே கடைக்குப் போயிருந்தார். அர்ஜுன் ஆபீஸ் போயிருந்தார். அப்போது "ரேகா உன்கிட்ட நான் பேசணும்" என்றார். நான், ஈரத்தைத் தலைப்பில் துடைத்துக் கொண்டு வந்தேன்.

"வேலையெல்லாம் ஆச்சா?"

"ஆச்சு."

"வேலை ஏதாவது இருந்தா முடிச்சுட்டு வா, கொஞ்ச நேரம் பேசணும்." என்றார்.

"ஆச்சம்மா, பேசலாம்" என்றேன்.

"என்னை அம்மான்னு கூப்பிடறே! எனக்கு ரொம்ப மனசுக்கு இதமா இருக்கிறது. அதே போல அவரையும் அப்பான்னு கூப்பிடறது நல்லாத்தான் இருக்கு. ஆனா... நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதே, நான் கொஞ்சம் அப்பட்டமான மனுஷி. குடும்பத்தில் அதனாலதான் எனக்குக் கெட்ட பேர். பட்டுனு மனசில இருக்கிறதைப் போட்டு உடைச்சுடுவேன். நீங்க ரெண்டு பேரும் பழகறது சரியில்லை."

"என்னம்மா சொல்றீங்க?" என்றேன் அதிர்ந்து போய்.

"நான் என் மாமனார் இருக்கறப்ப அவர் முன்னால வரவே மாட்டேன். சரி, நீ இந்தக் காலத்துப் பொண்ணு! எங்க நாட்கள் போல இருக்க மாட்டே. ஒத்துக்கறேன். ஆனா எதுக்கும் ஒரு லிமிட் வேணும் இல்லையா?"

எனக்குச் சட்டென்று அழுகை வந்து விட்டது. "எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல!" என்றேன்.

"நான் உன்மேலே தப்புச் சொல்லலேடி! அவர் கிட்டே ஜாக்கிரதையா இருன்றேன். எதனாலன்னா, நான் அவர் கூட முப்பது வருஷம் குடித்தனம் பண்ணவள். அவரோட ஒவ்வொரு பார்வைக்கும் எனக்கு அர்த்தம் தெரியும்! அதனாலதான், உன்னை எச்சரிக்கத்தான் இந்த மாதிரி பேசினேன். என் மேல உனக்குக் கோபம் நிச்சயம் வரும். நான் சொன்னது எத்தனை உத்தமமான அட்வைஸ்ன்னு அப்புறம்தான் தெரியும் உனக்கு!"

"இப்ப என்ன பண்ணணுங்கறீங்க?"

"அவர், பேப்பர் தானே படிக்கட்டும், காப்பிகேட்டா என்னை எழுப்பிவிடு. நான் கொண்டு கொடுக்கறேன், என்ன?"

நான் அழுதேன்.

"சேச்சே! இதுக்கா அழுவா ? சொந்த அப்பாகிட்ட கூட அந்த மாதிரி நெருக்கமா பழகக்கூடாதுன்னு சாஸ்த்ரங்கள்ள சொல்லியிருக்கு தெரியுமா?"

நான்மேலே பேசாமல் உள்ளே போய்ப் படுத்துக் கொண்டு விட்டேன். மாமியார் மேல் ரொம்பக் கோபம் வந்தது. அப்பா உள்ளே வந்து, 'ரேகா ரேகா' என்று கூப்பிட்டபோது,

"ரேகாவுக்கு உடம்பு சரியில்லை. நான் இருக்கேன், என்ன வேணும்? என் கிட்ட கேளுங்கோ" என்றார்.

"என்ன உடம்பு அவளுக்கு?" என்று என் ரூமில் அவர்வர, திரும்பிப் படுத்துக் கொண்டு தூங்குவது போல் பாசாங்கு செய்தேன்.

''என்னமோ டிரபிள்! நான் பார்த்துக்க றேன். உங்களுக்கு என்ன வேணும் சொல் லுங்கோ?''

''ரேகா வந்து கொடுத்தா ஜூஸ் சாப் பிடலாம்னு நெனைச்சேன்.''

''நான் கொடுத்தா?''

''வேண்டாம்'' என்று டீ.வி.யைப் பெரி சாக வைத்தார்.

''ரேகா, சொன்னேன் பாத்தியா?'' என்றார் மாமியார்.

''என்ன சொன்னே?''

''என்னவோ எங்களுக்குள்.''

''என்ன சொன்னே? ரேகா இவ உன் கிட்ட என்ன சொன்னா என்னைப் பத்தி?''

நான் மாமியாரைப் பார்க்க, 'சொல் லாதே' என்றது கண்கள்.

''ஒண்ணுமில்லைப்பா.''

''இவ சொல்றதையெல்லாம் கேக்கவே கேக்காதே! சைக்கிக் கேஸ். எப்படியோ முப்பது வருஷம் குப்பை கொட்டியாச்சு. சந்தேகப் பிசாசு!''

அவர் கோபமாகத் திரும்பிப்போனார்.

**மா**லை வந்தபோது அர்ஜுன் ஏதோ ஷாருக்கான் படத்துக்கு டிக்கெட் வாங்கி யிருந்தார்.

நான், 'தலைவலி - வரமாட்டேன்' என்று சொல்லிவிட்டேன்.

''டிக்கெட் வாங்கியாச்சே ரேகா, என்ன செய்யறது?''

''கிழிக்கப் போடுங்க!''

அவர் என்னை நிதானமாகப் பார்த்தார். கிழிக்கப் போடறதா? டிக்கெட் என்ன



விலை தெரியுமா? பணத்தினுடைய மதிப்பு தெரியுமா உனக்கு?''

''என்னைக் கேக்காம ஏன் வாங்கி னீங்க?''

''உனக்கு சந்தோஷம் தரதுக்கு உன்னை கேட்க வேண்டாம்னு நெனைச்சேன்.''

''சந்தோஷமா? இந்த வீடு நரகம்! இல்லாததையும் பொல்லாததையும் சொல் லிண்டு ஒரு மாமியார்!''

''ஓ! அப்படியா சேதி? அம்மா அம்மா'' என்று சற்று அதட்டலாகத் தன் தாயாரைக் கூப்பிட்டார்.

''என்னடா, பாலாஜி?'' - பாலாஜி என் பது அவர் செல்லப் பெயராம்.

''அவ கூட சண்டை போட்டியா?''

''நானா, இல்லையே ஏன்?''

''எதுக்காக மூஞ்சியைத் தூக்கி வெச் கண்டு இருக்கா?''

''அவளையே கேளு.''

''அம்மா, நான் நீங்க சொன்னதை அவர் கிட்ட சொல்லிடலாமா?'' என்றேன்.

''நானே சொல்றேனே! எனக்கு என்ன பயம்? பாலாஜி பாருடா, இவகிட்ட ஒரே ஒரு ரிக்வெஸ்ட் கேட்டுண்டேன். 'அப்பா வுக்குக் காப்பி கிப்பி கொடுக்கணும்னா என்னைக் கூப்பிடு. நீ கொண்டு கொடுக் காதே! அவர் பேப்பர் படிக்கணும்னா நான் படிக்கிறேன்'னு சொன்னேன். இது தப்பா? புருஷனுக்குச் செய்யணும்னு மனைவி ஆசைப்படப்படாதா?''

அர்ஜுன் என்னைப் பார்த்தார். நான் மாமியாரை நோக்கி ''அப்படியா பேசி னீங்க?''

''வேற எப்படி? சே! ரொம்ப நல்ல பொண்ணுன்னுதான் சொல்லி உங்காத்தில கல்யாணம் பண்ணி வெச்சா. என்ன இது! அம்மாவுக்கும் பிள்ளைக்கும் சண்டை பண்ணி வெச்சுருவே போல இருக்கே? என் புருஷனுக்கு நான் காப்பி கொடுக்கறேன்னு கேட்டது தப்பாடா பாலாஜி?'' என்றாள். இப்போது அம்மா அழ ஆரம்பித்து விட்டாள்.

நான், ''நீங்க என் பேச்சை நம்பப் போறீங்களா? உங்க அம்மா பேச்சை நம்பப் போறீங்களா?''

''ஏம்மா உங்களுக்காக எல்லா வசதியும் பண்ணிக் கொடுத்து...இதைவிட வசதியா ஒருவீடு இருக்க முடியுமா? எதுக்காக சண்டை போடறீங்க? எதுக்காக என் வாழ்க்கையை நரகமாக்கறீங்க? எனக்கு இருக்கற டென்ஷன் போதாதா?'' என்றார்.

''அர்ஜுன் யு ஆர் ஓவர் ரியாக்டிங்.''

''வேணாம்பா எங்களக் கோயமுத்தூர் கொண்டு விட்டுரு. மாப்பிள்ளையும் பொண் ணும் தாங்கு தாங்குன்னு தாங்கறா. ரேவதி குட்டி, பாட்டி பாட்டின்னே உயிரை வெச் கண்டு இருக்கு. நீதான் வாவாவான்னு கேட்டியேன்னு...''

அர்ஜுன் தீவிரமாக ''பாரும்மா, இது உன் வீடு! இந்த வீட்ல இருந்து யாரும் உன்னைத் துரத்த முடியாது. ரேகா, இந்த மாதிரி ப்ராப்ளம் எதும் வராம பார்த்துக்க! அதான் நான் சொல்வேன். ஏற்கெனவே எனக்கு டென்ஷன் அதிகம்.''

இதையெல்லாம் அப்பா அடுத்த அறையிலிருந்து கேட்டுக் கொண்டுதான் இருந்திருக்க வேண்டும்.

எனக்குப் புரியவே இல்லை. யார் சைக்கிக் கேஸ், அப்பாவா? அம்மாவா? யாரிடம் விளக்கம் கேட்பது? என் அம்மாவிடமா? அப்பாவிடமா? எப்படி சொல்வேன்? யாரிடம் சொல்வேன்? இந்த மாதிரி சந்தேகம் எல்லாம் உமன்ஸ் இரா, ஃபெமினாவில்தான் படித்திருக்கிறேன். அதெல்லாமே புருடா என்று நம்பிக் கொண்டிருந்தேன். எனக்கு ஷாக்காகி விட்டது.

கோபத்துடன் விருட்டென்று புறப்பட்டு அடுத்த ரூமுக்குச் சென்று அவர் போன் செய்தார். ''கீதா நான்தான் அர்ஜுன் பேசறேன். சாயங்காலம் மெலடி தியேட்டருக்கு வரியா? ஷாருக்கான் படம் வந்திருக்கு... எம் பெண்டாட்டி வரமாட்டங்கறா; டிக்கெட் வேஸ்ட் ஆகுது.''

பெண்டாட்டி!! என்ன அசிங்கமான, கொச்சையான பிரயோகம்! எனக்கு முதன் முதலாக முழுமையாக அவர்மேல ஆத்திரம் வந்தது. இதுவரை அவரை நான் வெறுத்த போதோ, வருத்தப்பட்டபோதோ ஓரத்தில் கணவன் என்கிற பாசம் இருந்தது. இப்போது இந்தக் கணத்தில் மட்டும் ஆத்திரம் முழுமையாகி மற்ற மென்மையான உணர்ச்சிகளையெல்லாம் விரட்டியடித்திருந்தது.

எனக்கென்னவோ இவர்கள் மூவரும் சேர்ந்து நாடகம் ஆடுகிறார்கள், ஒரே கட்சி, என்னைப் பைத்தியமாக அடிக்கப் போகிறார்கள் என்கிற பயம் வந்தது.

---

''டி. வி. சில நாடகம் எழுதி சம்பாதிச்ச பணத்துல வியாபாரம் பண்ணினேன். இப்ப தொடிச்சு போயிட்டேன்.''

''பிறரைக் கஷ்டப்படுத்தி சம்பாதிச்ச பணம் நிக்காதுங்க!''

- வலங்கைமான் நூர்தீன்





''உங்க கடை பனியன் நாளுக்கு நாள் நீண்டுகொண்டே போகுது...''

''வாங்கும்போதே சொன்னேனே, இந்த கம்பெனி பனியன் நீண்டு உழைக்கும்னு!''

- சோம. முத்துக்குமார்

---

விசில் அடித்துக் கொண்டே, என்னை அலட்சியம் பண்ணிக் கொண்டே தலை வாரிக் கொண்டார்.

**சா**யங்காலம் கீதா, அர்ஜுனை பிக்-அப் பண்ணிக் கொள்ள வந்த போது, ''என்ன ரேகா! என்ன விஷயம்? ஹஸ்பண்டு சினிமாக்கு கூப்பிட்டா வரலியாமே, ஏன்?''

இவளிடம் என்ன என்று, ''உடம்பு சரியில்லை கீதா'' என்றேன்.

''அது மட்டும்தானே!''

''அது மட்டும்தான்.''

''வேறு ஏதோ நடந்திருக்கு! சரி, போகலாம் அர்ஜுன். கம்ஆன்!'' என்றவள், மாமியாரிடம் விசாரித்தாள்.

''என்ன உங்க பையன் புதுசா கல்யாணம் ஆன மனைவியை விட்டுட்டு என்னை சினிமாக்கு கூப்பிடறார்?''

''அவளையே கேட்டுக்கோ'' என்றார் அம்மா

இருவரும் சென்ற பின் கூட கீதாவின் செண்ட் வாசனை மிச்சமிருந்தது. நான் என் அறையிலிருந்து வெளியே வந்தேன். மாமியாரிடம், ''பாருங்கம்மா! நான் மாமனார் கூடப் பேசினாக் கூடத் தப்புன்னீங்க! அவர் முன்னால வரக்கூடாதுன்னீங்க! ஆனா உங்க பிள்ளை கீதாவோட எத்தனை சகஜமா பேசிண்டு சினிமாவுக்குப் போனார்? அது மட்டும் எப்படி நியாயம்?'' என்றேன்.

''இதில் நியாயம் அநியாயம் இல்லையடி பெண்ணே! எனக்கு என் கணவன், என் மகன் ரெண்டு பேரையும் நன்னாவே தெரியும்! அதான் காரணம்'' என்றாள்.

(தொடரும்)


தலைவியின் தனி விமான வெள்ளோட்டம் வெற்றிகரமாக முடிந்ததா? ஏரோப்ளேன் காவடி.
பக்தி
முக்திப்
எதிர்க்கட்சியின் லஞ்ச ஊழல் குற்றச்சாட்டு பிசுபிசுத்துப் போ
நோட்டு ஆடைப் பிரார்த்தனை
தலைவரின் ஜலதோஷம் குணமடைய, பட்டாணியை மூக்கால் தள்ளியபடி பிரதட்சிணம்.
PRESS
PRESS

தல்லாம் நமது அரசியல்வாதிகள் பக்தி மார்க் வகுதீவிரமாக இறங்கியிருக்கிறார்கள். நூதன ாகளில் தம் பக்தியை வெளிக்காட்ட அவர்கள் ் பிடித்துக் கொள்வதாகத் தெரிகிறது. ஏதோ ா சின்ன உபகாரம். இங்கே சில ஐடியாக்கள் :

# போச்சு!









# காதல்

## உமாகல்யாணி

"இதென்ன சாம்பாரா வச்சிருக்கே! இதுக்கு முன்னாடி நீ சமையலே பண்ணினது கெடையாது? உப்பையும் காணோம், உரைப்பையும் காணோம். தெட்டுத் தண்ணியா நிக்கிது... மனுஷன் சாப்பிடுவானா இதை?''

என்று கூறிக் கொண்டே சாப்பாட்டுத் தட்டை எடுத்து அப்படியே விசிறி அடித்தான்.

அறை முழுவதும் சாப்பாட்டுச் சிதறல் கள்!

அப்படியே விக்கித்துப் போய்விட் டாள் ஜோதி.

கொஞ்ச நாட்களாகவே சிதறல்கள் தாம். ஆனால், இன்றுதான் இதுமாதிரி. மனத்தை அரித்துப் பிடுங்குகிற மாதிரி.

காதலிக்கிறபோது காண்பிக்கப்பட்ட அன்பு, கல்யாணம் ஆன பிறகு காண்பித்துக் கொண்டிருந்த அன்பு எல்லாம் என்ன ஆயிற்று?

பேசப்பட்ட வசனங்கள், நெகிழப் பண்ணிய வருடல்கள் எல்லாம் என்ன வாயின?

இன்று அப்படி ஒன்றும் சாம்பார் மோச மில்லை.

இப்போதெல்லாம் சமைப்பதற்கு நிறையக் கற்றுக் கொண்டாயிற்று.

சமையல் மோசமாய் இருந்த நாட்களில் எல்லாம் முகம் கோணாமல் சாப்பிட்டு விட்டு, இப்போது நன்றாக இருக்கிற போதும்கூடக் குறைகூறிக் கோபப்படுவது என்றால் —

கோபம் சமையல் மீது இல்லை.

சமைக்கிறவள் மீதா?

சொற்களின் வீச்சு அப்படித்தானே சொல்கிறது!

எதனால்?

கேட்டுப்பார்த்து விட்டாள்.

''ஏங்க இப்படிப் பண்றீங்க? இப்ப எதுக்காக இவ்வளவு கோபப்படணும்? சாம்பார் நல்லாத்தானே இருந்திச்சு. நானே சாப்பிட்டுப் பார்த்தேன்! இதைப் போய் நல்லால்லேன்னு நீங்க சொன்னீங்கன்னா, குறை சாம்பார்ல இல்லே. உங்ககிட்டே தான்.'' என்றாள்.

'வெடுக்'கென்று முகம் மாறினான் ஆனந்த்.

''ஆமாண்டி, நான் பொய் சொல்றேன். அருமையான சாம்பாரை நீ பண்ணி விருக்கே. நான் வேணும்னே குறை சொல் றேன்'' என்று இரைந்தான் ஆனந்த்.

அந்த இரைச்சலில் செயற்கைக் கோபம் இருந்ததாய் ஜோதி எண்ணினாள்.

''இதோ பாருங்க, இப்ப நீங்க பொய் தான் சொல்றீங்க. ஏதோ காரணத்தை மனகல வெச்சுக்கிட்டு, இப்படி இல்லாதது பொல்லாதது எல்லாத்தையும் சொல்லி, என் மேலே வீணாய்க் கோபப்படுறீங்க. கோபம் எதுக்கு? என் கிட்டே நேராக் கேளுங்க. பொய்க் காரணம் தேடிட்டு அலை யாதீங்க'' என்றாள்.

ஜோதி சொன்னது அவனைச் சுட் டது.

அந்த வேளையில் அவளின் உண்மைக் கூற்று, அவனது இயலாமையைப் படம் போட, பலவீனத்தைப் பலமாய்க் காட்டு கிற முயற்சியில் இறங்கினான்.

''என்னடி சொல்றே? பொய்க் காரணம் தேடிட்டு அலையிறேனா? திமிர் கூடிப் போச்சுடி உனக்கு. என்னையே பொய் யன்னு சொல்ற அளவுக்குத் தைரியம் வந்து டுச்சா உனக்கு...?'' என்று கேட்டவன், அவள் சற்றும் எதிர்பாராத வேளையில் 'சப்'பென்று கன்னத்தில் ஓர் அறை விட் டான்.

அலறாமல் நின்றாள் அவள்.

அலறி ஆர்ப்பாட்டம் பண்ணுகிற டைப் இல்லை அவள்.

'இப்படி அறைவிட்டும் கூட, எந்தனை அழுத்தமாய் நிற்கிறாள் பாரேன்! இப்படி நின்னு என்னை அவமதிக்கிறாளே! என் கிட்டே ஏற்பட்டிருக்கிற அலட்சியத்தைத் தான் இந்த மாதிரி நின்னு காட்டுறா!'

ஆனந்தின் மனத்தில் எதிர்மறையான எண்ணங்கள்தான் ஓடினவே அன்றி, நிதான மாய் யோசித்தலோ, அனுகுதலோ இல்லா மற் போயிற்று.

''என்னடி இப்ப வாயைக் காணோம்? பொய்க் காரணம் தேடுறேன்னு பொய்ப் புகார் பண்ணுனியே, நிரூபிக்க முடியு மாடி?''

மீண்டும் குரலில் கேட்டான்.

ஜோதி மெல்லத் திரும்பினாள்.

அது அவனது குற்றச்சாட்டைத் தூச்சமாய்த் தூக்கி வீசுகிற திரும்புதல்.

அவன் இன்னமும் கொதிப்பு நிலைக்குப் போனான்.

''ஏன்... என்னாச்சு இன்னிக்கு உங்களுக்கு? ஏன் இப்படிப் படபடன்னு வர்றீங்க. கொஞ்சம் நிதானம்தான் காண்பியுங்களேன்.''

''ஆமாண்டி, நான் நிதானம் கெட்டுத்தான் போயிருக்கேன். இந்த வாக்கில அலைஞ்சேன்னா...''

''முன்னாடி வலது கன்னம். இப்ப இடது கன்னத்துல அறைங்க.

ஆனா இதுக்கு என்ன காரணம்னு ஒரு வார்த்தை சொல்லிட்டுச் செய்றீங்கன்னா, எனக்கும் புரிஞ்சுக்கிற வாய்ப்புக் கிடைக்கும்.''

# கல்யாணம்

நிதானம் தவறாமல் பேசினாள்.

''ஊர்ல கண்டபடி பேச ஆரம்பிச்சிட்டாங்க. கோபம் வருமா வராதா?''

''வர வேண்டியதுக்கு வந்துட்டாப் பரவால்ல.''

''அப்ப அநாவசியத்துக்கு வருதுங்கிறியா?''

''காரணம் சொன்னால்ல அவசியமா, அநாவசியமான்னெல்லாம் சொல்ல முடியும்.''

சில கணங்களைத் தேக்கி வைத்தான். பிறகு,

''என்னை இப்ப ஊர்ல உள்ளவங்க மனுசன்னே மதிக்கிறதில்லை'' என்றான் வருத்தக் குரலில்.

''உம்...''

''எல்லாரும் பேசுறாங்க. தெரிஞ்சவங்க, தெரியாதவங்க எல்லாருமே பேசறாங்க.''

''என்னன்னு?''

''நான் உனக்கு அடிமை ஆயிட்டேன்னு. எனக்கு முதுகெலும்பே இல்லைன்னு.''

''ஏனாம்?''

''காதல் கல்யாணம் செஞ்சுக்கிட்டதாலே, என் முதுகெலும்பை நீ முறிச்சு வெச்சிருக்கியாம். என்னாலே நிமிர்ந்து நடக்க முடியாதாம். நான் உனக்குச் சரண்டராய்ட்டேனாம். இன்னும் என்னென்னவோ... வெளில சொல்ல முடியாத வார்த்தைங்களையெல்லாம் பிரயோகிச்சு என் காதுபடவே மோசமாப் பேசுறாங்க..''

''ஓ! அதான்..., நீங்க இப்படி வித்தியாச



# அருள்வாக்கு



தஞ்சாவூர் ராஜ்யத்தில், நானூறு வருஷங்களுக்கு முன் நாயக வம்சத்தைச் சேர்ந்த ரகுநாத நாயக்கர் ஆண்டபோது ஏற்பட்ட 'ஸாஹித்ய ரத்னாகரம்' என்ற காவியத்தை நான் பார்க்க நேர்ந்தது. அதை எழுதிய யக்ஞ நாராயண தீக்ஷிதர் பெரிய சிவபக்தர். அவர், அதிலே ஓரிடத்தில் சொல்லியுள்ள ஈச்வர ஸ்தோத்திரம் ஒன்றிலும், வியாகரணத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆதென பாணிநிநாததோ (அ) க்ஷர
ஸமாம்னாயோபதேசேனய:
சப்தானாம் அநுசாஸநான்யகலய:
சாஸ்த்ரேண ஸூத்ராத் மனா ।
சப்தார்த்த ப்ரதிபத்தி ஹேதும்
அநிசம் சந்த்ராவதம்ஸம் பஜே
(ஸாஹித்ய ரத்னாகர காவியம், XI-124)

இந்த ச்லோகத்தில் வரும் "அக்ஷர ஸமாம்னாயம் என்பது வியாகரணத்திற்குப் பெயர். அக்ஷரங்களைக் கூட்டமாகச் சேர்த்து வைத்த இடம் என்று அர்த்தம். ஈச்வரனுடைய மூச்சுக் காற்று வேதம். அவருடைய கைக்காற்று அக்ஷர வேதம். அதாவது மாஹேச்வர ஸூத்திரம். "சப்தானுசாஸனம்" என்பதும் அதன் பெயர். "பாணினி நாதத:" என்பதற்குப் "பாணிகளால் (கைகளால்) சப்தம் பண்ணினாய்" என்றும், "பாணினிக்குச் சப்தம் ஏற்பட்டது" என்றும் சிலேடையாக இரண்டு அர்த்தங்கள் உண்டாகின்றன. அதாவது ஈச்வரன் கையிலிருந்து உண்டான சப்தத்தை வைத்துக் கொண்டு, பாணினி வியாகரணம் பண்ணினார் என்னும் கருத்து இதில் குறிப்பிக்கப்படுகிறது.

"நீ கையாட்டியதால் வியாகரண ஸூத்திரங்கள் ஏற்பட்டன. காலையாட்டியதால் அதற்கு பாஷ்யத்தை உண்டு பண்ணினாய்" என்று ச்லோகம் சொல்லுகிறது. மஹாபாஷ்யத்தைச் செய்த பதஞ்ஜலி ஆதிசேஷாவதாரம். ஆதிசேஷன் பரமேச்வரன் காலில் பாதஸரமாக இருக்கிறார்! இதை நினைத்துத் தான் காலாட்டி பாஷ்யத்தை உண்டு பண்ணினார் என்று கவி சொன்னார்! "சப்தமும் அர்த்தமும் உன்னாலேயே ஏற்பட்டது" என்று அவர் முடிக்கிறார்.

வியாகரணத்திற்கு இப்படிப் பல காரணங்களால் பரமேச்வரன் மூல புருஷனாய் இருப்பதால், அவருடைய கோயிலில் வியாகரண தான மண்டபங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்று தெரிந்து கொண்டேன்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மாய் நடக்க ஆரம்பிச்சிருக்கீங்களா?"

"உம்!"

"நானொன்னும் சரண்டராயிடலே. என் முதுகெலும்பை முறிக்கும்படி குனிஞ்ச குடுத்திடலே. நான்தான் எங்க வீட்ல எஜமான். நான் வச்சதுதான் சட்டம். நான் நிமிர்ந்தேதான் நடக்கிறேனாக்கும்னு காட்டிக்கிறதுக்காகத்தான் இப்ப இப்படி இயல்புக்கு மாறாய் நடக்க ஆரம்பிச்சிருக்கீங்களா?"

"உம்."

ஜோதி அவனை நிதானமாக ஏறிட்டாள்.

உணர்வுகளின் பொங்குதலில் ஒரு மனிதன் தனது நிதானத்தை இழந்து போகிறான் என்பது எத்தகைய நிஜம் என்பதைச் சிந்தித்தபடியே அவனைப் பார்த்தாள்.

சரியான கோணத்தில் இவரை அணுகினால், பழைய ஆனந்த் கிடைத்து விடுவார் என்று எண்ணினாள்.

"அப்ப நீங்க சாம்பாரை மோசம்னு சொன்னது நிஜமில்லே. உங்க கோபத்தை ஆரம்பம் பண்றதுக்கு சாம்பாரை யூஸ் பண்ணிக் கொண்டீங்க..."

"........"

''சரி, இப்படி நீங்க கோபத்தை வெளிப் படுத்தினதாலே எதைச் சாதிக்க முடிஞ்சி ருக்கு?''

''.........''

''அநாவசியமா என் மனசைப் புண் படுத்த மட்டும்தான் முடிஞ்சிருக்கு.''

''........''

''இது சரின்னு தோணுதா இப்ப உங்க ளுக்கு? எப்பவாச்சும் நான் உங்களை அனு சரிக்காம மீறிப் போறதா இதுக்கு முன்னாடி நீங்க ஃபீல் பண்ணினது உண்டா? இப்ப யாரோ, என்னவோ சொல்றாங்கன்னுட்டு, முக்கியத்துவம் தரவேண்டியதுகளை ஒதுக்கி வச்சிட்டு, தேவையில்லாத விஷயத் துல மட்டும் மூக்கை நுழைச்சிருக்கீங்க...!''

''ஜோதி!''

''நாம்ப காதலிச்சுக் கல்யாணம் பண் ணிக் கொண்டதாலே வித்தியாசமாப் போனது ஒண்ணே ஒண்ணுதான்.''

''என்ன அது?''

''சொல்லப் போனால் அதையும் வித்தி யாசம்னு சொல்லிற முடியாது. பெரியவங்க பண்ணி வைக்கிறப்ப கூட அது நிகழாமப் போகும்னு உறுதி தர முடியாதே!''

''எதைச் சொல்றே ஜோதி நீ!''

''உங்க பெற்றோர் நம்மை விட்டு விலகிப் போனதைச் சொல்றேன். அவங் களாப் பண்ணி வச்சாக்கூட.... ஏதாச்சும் பிரச்னை வந்து பிரிஞ்சு போக சான்ஸ் இருக்கு. இப்ப நான் ஏதாச்சும் பிரச்னை பண்ணி, அதனாலே பிரிஞ்சு போனாங்களா, இல்லியே. நம்ம காதலை முகாந்தரம் வச்சல்ல பிரிஞ்சு போனாங்க? ஓர் அனா தைப் பொண்ணை மருமகளாக்கிக்கிற தாங்கிற தயக்கத்துல இல்ல பிரிஞ்சு போனாங்க?''

''அதானே பேசறாங்க ஊர்ல.''

''பிரிஞ்சு போனதாலே பேசறாங்க.''

''ஆமாம்.''

''ஆனாக் காரணம் நானில்லே. நான் எதுவும் பண்ணிறலே. போனது அவங்க ளாலே! அதனாலே ஊர் வாயை மூடணும்னால் என்னைப் போட்டு அடிக் கிறதுல அர்த்தமில்லே. அவங்க மறுபடியும் நம்மோட சுமுகமாப் பழகிட்டாப் போறும். ஊர்ல வாய மூடிக்குவாங்க. அநாவசியமாப் பேச மாட்டாங்க...''

''அதெப்படி அவங்க மனசை மாத்த முடியும்?''

''கஷ்டம்தான். ஆனால், சுலபமாயிருக் குன்னு என்னைப் போட்டு அடிச்சிட்டால் மட்டும் ஊர் வாய் மூடிடுமாக்கும்?''

''ஜோதி!''

''பேசாம அவங்களைப் போய்க் கன்வின்ஸ் பண்ணப் பாருங்க. ஒரு தட வைக்கு நாலு தடவையாய் முயற்சி பண்ணுங்க. அவங்களோடது பெத்த மன சுங்க. சுலபமா இளகிடும்.''

''இளகாது!''

''மறுபடியும் தப்பாச் சொல்றீங்களே! சுலபமாயிருக்கு... கோபிங்கா சிலது முடியாதுங்க. ஒரு நல்லது நடக்கப் பிரயாசை வேணுங்க. இதை எண்ணிப்பாருங்க, இப்ப நாமும் அவங்களும் சுமுகமா இருந்திட்டா ஊர்ல பேச முடியுமா? ஊர்ல பேசலைன்னா இது மாதிரி கோபம் உங்களுக்கு வருமா?''

''.......''

''லோ, இப்பவே போங்க. அவங் களும் எப்ப எப்பன்னுதான் எதிர்பார்த் துட்டிருப்பாங்க. காலம் ஒரு மந்திர வாதிங்க. அது நிறைய மாயாஜாலம்லாம் பண்ணும்...''

அவன் புறப்பட்டான்.

''சாப்பிட்டுப் போங்க...''

''அங்கியே போய்ச் சாப்டுக்கிறேன். அம்மா போடலைன்னாலும் நானே எடுத் துப் போட்டுச் சாப்பிட்டு வந்துடறேன்...''

போய்விட்டான்.

அடிபட்ட கன்னத்தைத் தடவினாள். வலிக்கவில்லை!

உண்மை, அன்பு, தூய்மை போன்றவைகளின் குறியீடு வெண்மை. சமண மதமும் இவற்றையே போதிக்கிறது. எனவேதான் வெண்மையான சலவைக் கற்களைக் கொண்டு ஸ்ரீ சந்திரப்பிரபு ஜெயின் கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். இணைப்புகளுக்கு இரும்பு உபயோகிக்காமல் பித்தளையும் செம்பும் மட்டும் பயன்படுத்தியிருக்கிறார்கள் — இதுவும் புனிதத் தன்மை கருதி. இன்று தங்கசாலையையே அழகுபடுத்தி, உயர்ந்து நிற்கிறது கோவில்.

81 அடி உயர்ந்த கோவில். இரண்டு மாடிக் கட்டடம். முழுதும் சலவைக் கல். தென்னிந்தியாவிலேயே பெரிய சமணர் கோவில். பதினைந்து வருடமாகக் கட்டிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

இக்கோவிலில் இருக்கும் சக்தி வாய்ந்த தெய்வம் ஸ்ரீசந்திரப்பிரபு ஜெயின். இவர் எட்டாவது தீர்த்தங்கரர். ஸ்ரீமஹாவீரர் இருபத்தி நான்காவது தீர்த்தங்கரர். சந்திரப் பிரபு இன்றைக்கு 2580 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்திருக்கிறார். அதனால் இந்த எட்டாவது தீர்த்தங்கரர் பற்றிய தகவல்கள் வெகு சொற்பமாகவே கிடைத்துள்ளன.

ஸ்ரீ சந்திரப்பிரபு, காசியில் பெரும் அரசனாக வாழ்ந்திருக்கிறார். பின்னர் 'சாது'வானது, இன்றைய மதுவனம் என்று அழைக்கப்படும் சமித்சிகார் எனும் இடத்தில். அவரோடு மேலும் ஆயிரம் பேர்கள் சாதுக்களானார்களாம்.

# அமைதிக்கு ஒரு கோயில்!



● ஆலய முகப்பு (படம் : கோபிநாத்)

சென்னை தங்கசாலையில் 1904லிலிருந்தே ஸ்ரீ சந்திரப்பிரபுவுக்குக் கோயில் இருந்திருக்கிறது. அப்போது சிறு கோயில். இப்போது இப்பெரும் கோவிலில் அந்தக் காலத்துச் சிறு சிலைகளை முதல் மாடியில் வைத்துள்ளனர். அதற்கும் மேல் இரண்டாவது மாடியில் இருபத்தி மூன்றாவது தீர்த்தங்

கரர் ஸ்ரீபாஸ்வனாத் ஜெயின் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். இவர் காத்தலுக்கான கடவுள். எந்த சமணர் கோவிலிலும் இவரின் விக்கிரகம் உயரத்தில் பிரதிஷ்டை செய்யப் படுமாம்.

**ப**க்தியின் உச்சத் தில் ஒவ்வொருவரும் மெல்ல மெல்ல அடி எடுத்து நடக்கிறார்கள். பெண்கள் முந்தானை யால் தலையைப் போர்த்தி பக்தியின் அமைதியில் மூழ்கி யிருக்கிறார்கள். அஹிம்சை, சத்தியம், 'அசைகந்தா பிரம்மச் சரிய அபாிக்கிரஹா' மற்றும் 'அஸ்டேயா' என்ற கொள்கைகளை போதிக்கும் சமணத் தின் வாழ்வியல் பொருளுணர்ந்து ஆண் களும் தங்கள் பக்தி பாவத்தை வெளிப் படுத்துகிறார்கள்.



✱ ஸ்ரீ சந்திரப்பிரபு - 8 வது தீர்த்தங்கரர்.

**வெ**ளியிடம், மண்டபம், மூலஸ்தா னம் என்ற மூன்று பகுதிகள் இக்கோவிலில் உண்டு. சமணர் என்று மட்டுமில்லாமல் அனைவரும் வழி படும் இக்கோவிலின் சிறப்பு, பெண்கள் உட்பட யார் வேண்டு மானாலும் நேரடியாகக் கடவுளைத் தொட்டு பூஜைகள் செய்யலாம் என்பதே. ஒரே நிபந்தனை, பூஜை செய்பவர் சுத்த சைவ உணவு உண்பவராக, குளித்து, அதற்கே யுண்டான புனித ஆடை உடுத்தி யிருக்க வேண்டும். பால் அபிஷேகம், நீர், சந்தனம், பூக்கள் இவை கொண்டு செய்யப்படும் அபிஷேகம், அகர்பத்திகள் கொண்ட தூபம், தீபம், அன்னம், இனிப்பு பழங்களின் நைவேத்யம் என்று பூஜிக்கிறார்கள்.

பிப்ரவரி 16 முதல் 25 வரை நடந்த இக் கோவிலின் கும்பாபி ஷேகப் பெருவிழா வின்போது பல லட்சம் பேர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டது. ஏழைகளுக்கு வேறுபல உதவி களும் வழங்கப்பட்டன. 24ஆம் தேதி காலை ஒரு மணி வரை சுமார் 1.35 லட்சம் பக்தர்கள் ஸ்ரீ சந்திரப்பிரபு தேவனைத் தியா னித்து மெய்யுருகியிருக்கிறார்கள். சென்னையின் ஒவ்வொரு ஜைனரும் இக்கோவில் பணிக்கு இரண்டு ரூபாயிலிருந்து பல லட்சங்கள் வரை தன்னாலியன் றதைக் கொடுத்திருக்கிறார்கள். பக்தர்களின் சிரமதானமும் அளவிட முடியாதது. வியாபாரத்தின் கடல், சென்னையின் தங்கசாலை. இப்போது பக்தி அலை மோதும் சமுத்திரமாகவும் காட்சி தருகிறது.

**கமலமனராஜன்**



## 48. சாரு எங்கே?

தொட்டிலில் படுத்துத் தூங்குவது போல, கட்டை வண்டியில் ஆனந்தமாய்த் தூங்கிய சாரு அதிகாலை நேரத்தில் பட்சிகள் பாடிய திருப்பாவையைக் கேட்டுத் துயிலெழுந்தாள். பக்கத்தில் கையால் தடவிப் பார்த்தாள். தாத்தா இல்லாமற் போகவே, ''தாத்தா!'' என்று அலறிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். ஏற்கெனவே எழுந்திருந்து வண்டியின் பின்னால் உட்கார்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்த சம்பு சாஸ்திரி, ''ஏன், சாரு! இன்னும் சற்றுத் தூங்கேன்'' என்றார். சாரு அவரைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு,

''நான் பயந்து போய்விட்டேன், தாத்தா! முன்னே மாதிரி எங்கே என்னை விட்டுட்டுப் போய்விட்டயோன்னு பார்த்தேன்'' என்றாள்.

சம்பு சாஸ்திரி சிரித்துக் கொண்டார்.

''தாத்தா! உன்னை விட்டுட்டு நான் அந்த மாமி வீட்டுக்குப் போனதிலிருந்து, அடிக்கடி உன்னைப் பத்தி சொப்பனம் கண்டுண்டிருந்தேன். நீ என்னைச் சொப்பனத்திலே பார்த்தாயோ?'' என்றாள் சாரு.

''இல்லை, சாரு! நான் உன்னைச் சொப்பனத்திலே பார்க்கலை. ஆனால், ஏன் தெரியுமா?'' என்று சாஸ்திரி கேட்டார்.

''ஏன்னா, உனக்கு என் மேலே ஆசை இல்லை.''

''அதுதான் தப்பு. சொப்பனம் எப்ப காணுவா எல்லாரும்? தூங்குகிறபோது தானே? உன்னைப் பிரிஞ்ச அப்புறம் நான் தூங்கவே இல்லை. சாரு!'' என்று சாஸ்திரி சொன்னார்.

அதைச் சரியாய்க் காதில் கூட வாங்கிக் கொள்ளாமல், தாத்தா, தாத்தா! அதோ 'ரிகிங் ரிகிங்' என்று ஒரு பட்சி கத்தறதே, அது என்ன பட்சி தாத்தா?'' என்று சாரு கேட்டாள்.

இந்த மாதிரி ஒவ்வொரு பட்சியின் குரலையும் தனித்தனியே கண்டு பிடித்துத் தாத்தாவை அது என்ன பட்சி என்று கேட்டு வந்தாள். அவரும் தெரிந்த வரையில் சொல்லிக் கொண்டு வந்தார்.

கிழக்கே சூரியன் தகதகவென்று புறப்பட்டுக் கொண்டிருந்த சமயம் சாலை ஓரத்தில் ஓர் அழகான குளம் தென்பட்டது. வண்டியை நிறுத்தச் சொல்லி, சாஸ்திரியும் சாருவும் இறங்கி அந்தக் குளக்கரைக்குச் சென்றார்கள்.

சாரு, இந்த மாதிரி நாட்டுப் புறத்தையும், குளத்தையும் இதற்கு முன் பார்த்ததே கிடையாது. ஆகையால், அவளுக்கு அளவில்லாத சந்தோஷம் உண்டாயிற்று. குளத்தில் பூத்திருந்த தாமரையையும், அதைச் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரம் செய்த வண்டையும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். குளக் கரையிலிருந்த மரங்களின் மீது அணிற் பிள்ளைகள் துள்ளி ஓடுவதைப் பார்த்த போது, அவளுக்குத் தானும் ஓர் அணிற் பிள்ளையாக மாறி மரத்தின்மீது துள்ளி ஓடவேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. குளத்தில் வாத்துக்களைப் போல நீந்த வேண்டுமென்றும் ஆசை கொண்டாள். வண்டாக

அமரர் கல்கி

தியாக



மாறித் தாமரைப் பூவைச் சுற்றிச் சுற்றி வரவேண்டுமென்று விரும்பினாள். குளத்து ஜலத்தில் காலை வைத்ததும் மீன்கள் சுற்றிக் கொண்டு கொத்தின. அப்போது உண்டான குறுகுறுப்பு அவளுக்கு மிகுந்த குதூகலத்தை அளித்தது. ஜலத்தில் காலை வைப்பதும், மீன்கள் கொத்த ஆரம்பித்தவுடன் எடுப்பதும் அவளுக்குப் பெரிய விளையாட்டா யிருந்தது.

சாஸ்திரியார் இதற்குள் காலைக் கடன்களையெல்லாம் முடித்துவிட்டு, சாருவை அருகில் அழைத்து உட்கார வைத்தார். ''குழந்தை! பாரதத் தாயைப் பற்றி உனக்கு ஒரு பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறேன், கற்றுக் கொள்ளுகிறாயா?'' என்று கேட்டார்.

''பேஷாக் கத்துக்கறேன்'' என்றாள் சாரு.

''இனிய பொழில்கள் நெடிய
வயல்கள்
எண்ணரும் பெரு நாடு
கனியுங் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றித் தரு
நாடு''

என்று சம்பு சாஸ்திரி சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார்.

காலையில் குளக்கரைக்கு வந்த கிராமவாசிகள் சிலர் சம்பு சாஸ்திரி சாருவுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டுவிட்டுப் போய், ''யாரோ ஒரு பெரியவரும் குழந்தையும் வந்திருக்கிறார்கள்'' என்ற செய்தியை ஊரில் பரப்பினார்கள்.

அதே சமயத்தில், சென்னையில், 'வஸந்த விஹாரம்' அமளிதுமளிப் பட்டுக் கொண்டிருந்தது. வழக்கம் போல் அன்று காலை உமாராணி கண்விழித்தெழுந்ததும், ''சாரு!'' என்று கூப்பிட்டாள். கட்டிலைப் பார்த்தாள்; குழந்தையைக் காண வில்லை. 'இன்றைக்கு என்ன, குழந்தை அதற்குள் இறங்கிக் கீழே போய்விட்டாள்?' என்று எண்ணிக் கொண்டு கீழே வந்தாள். வேலைக்காரர்களை விசாரித்தாள். அவர்கள் தங்களுக்குத் தெரியாதென்றார்கள். ''தோட்டத்திலே இருக்கிறாளா, பாருங்கள்! எங்கேயாவது பூச் செடிகிட்ட நின்று கொண்டிருப்பாள்'' என்றாள்.

வேலைக்காரர்கள் சற்று நேரத்துக்கெல்லாம் வந்து தோட்டத்தில் எங்கும் காணவில்லை என்றார்கள்.

காப்பி சாப்பிடும் நேரம் ஆயிற்று. இன்னும் குழந்தையைக் காணோம். உமாவுக்கு இப்போது கவலை உண்டாயிற்று. வேலைக்காரர்களை விட்டு மறுபடியும் மாடியிலும் தோட்டத்திலும் நன்றாய்த் தேடச் சொன்னாள். ஒன்றும் பிரயோஜனமில்லை. அதற்குள் ஒரு வேலைக்காரி, அதிகாலையில் தான் வந்தபோது கதவெல்லாம் திறந்து கிடந்தது என்று சொன்னாள்.

நேரம் ஆக, ஆக, உமாவின் பதை பதைப்பு அதிகமாயிற்று. 'ஒருவேளை தாத்தாவைப் பார்ப்பதற்கு ஒண்டியாகப் போய் விட்டாளோ குழந்தை!' என்று நினைத்தாள். உடனே, மோட்டாரைக் கொண்டு வரச் சொல்லி ஏறிக் கொண்டு விரைவாகச் சாவடிக் குப்பத்துக்கு விடச் சொன்னாள்.

வண்டி, சாவடிக் குப்பத்தை அடைந்த போது, அங்கே சம்பு சாஸ்திரியின் குடிசை வாசலில் ஏழெட்டுப் பேர் கும்பலாக நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் நல்லானும் அவனுடைய மனைவியும் மைத்துனனும் இருந்தார்கள்.

உமா, வண்டியிலிருந்து இறங்கி மிகுந்த மனக் கலக்கத்துடன் அவர்களிடம் வந்து, ''சாஸ்திரி ஐயா வீட்டிலே இருக்காங்களா?'' என்று கேட்டாள்.

''அவங்களைத்தான் அம்மா, காணோம்! போகப் போறேன், போகப் போறேன்னு சொல்லிக்கிட்டிருந்தாங்க. கடைசியிலே, போய்விட்டாங்க போலிருக்கு'' என்றான் நல்லான்.

''நான்தான் அப்பவே சொன்னேனே, ஐயாவுக்கு எப்போது போக வேணுமென்று தோணிப் போச்சோ, இனிமே இங்கே இருக்க மாட்டாங்கன்னு?'' என்றான் சின்ன சாமி.

''அவுங்க இவ்வளவு பிடிவாதமாயிருப்பாங்கன்னு தெரிஞ்சா, நானும் அவங்களோட கிளம்பிருப்பேனே?'' என்றான் நல்லான்.

நல்லானுடைய மனைவி உமாராணியைச் சுட்டெரித்திடுபவள் போலப் பார்த்து, ''நீ வந்தாலும் வந்தே, அம்மா, எங்களுக்கெல்லாம் சனியன் பிடிச்சுடுத்து. கொழந்தையை உன் வூட்டிலே விட்டுட்டு வந்திலே ஊரை விட்டே போய்ட்டாங்க'' என்றாள்.

உமாவுக்கு இந்த வார்த்தை, புண்ணிலே கோலை விட்டுக் குத்துவதுபோல் இருந்தது. ஆனாலும், தனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும் என்ற எண்ணமும் கூட இருந்தது. இதனால் ஒரு நிமிஷம் பேச நாவெழாமல் தத்தளித்தாள். பிறகு சமாளித்துக் கொண்டு, ''என் பேரிலே பிசகு தான். ஆனால், நீங்கள்ளாம் கவலைப்பட வேண்டாம். ஐயாவை எப்படியாவது கண்டு பிடிச்சு உங்களண்டை கொண்டு வந்து சேர்க்கிறேன்'' என்றாள்.

''அப்படியே கொழந்தையையும் சேர்த்துக் கொண்டாந்து விட்டுடுங்கோ! அம்மா! சாரு போனதிலிருந்து எங்க குப்பங்களையேயில்லாமே போச்சு!'' என்றான் அங்கு நின்றவர்களில் ஒருவன்.

உமா விரைந்து சென்று வண்டியில் ஏறிக் கொண்டாள். அவள் மனம் சொல்ல முடியாத வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தது. எப்படியோ அப்பாவும் சாருவும் சந்தித்து இரண்டு பேருமாய்ப் புறப்பட்டுப் போயிருக்கிறார்கள்; தன்னிடமுள்ள வெறுப்பினால்தான் அப்படிச் சொல்லாமலே கிளம்பிச் சென்றிருக்கிறார்கள். 'ஐயோ! பாவி, என்ன காரியம் செய்தேன்! அப்போதே அவர் காலிலே விழுந்து அப்பான்னு கதறி மன்னிப்புக் கேட்காமல் போனேனே! என்னென்னமோ யோசனை பண்ணிண்டு இருந்துட்டேனே? இப்போது மோசம் போயிடுத்தே! தள்ளாத கிழவரையும், சின்னக் குழந்தையையும் ஊரை விட்டுத் துரத்திட்டேனே, பாவி! எங்கே

போனார்களோ, என்னமோ தெரியவில்லையே? அகப்பட்டாலும் என்னை முகமெடுத்துப் பார்ப்பார்களா? இனிமேல், நிஜத்தைச் சொன்னால்கூட அப்பா நம்பு வாரோ என்னமோ தெரியவில்லையே!

'நல்லான்! நீயல்லவா உத்தமன்? ஊரை விட்டுக் கிளம்புகிறபோது, 'எஜமானைக் கவனிச்சுக்கோ!' என்று சொல்லி விட்டு வந்தேன். அப்படியே இந்தப் பட்டணக் கரையிலே வந்துகூட நீ அவரை வைத்துப் பராமரித்திருக்கிறாய்! அவருடைய சொந்தப் பெண் நான், இந்த மாதிரி அவரை ஊரை விட்டே துரத்திவிட்டேன்!'- இம் மாதிரி உமா துயரச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் போது, வண்டி மறுபடியும் 'வஸந்த விஹார'த்தை அடைந்தது.

## 49. 'ஸுலோச்சு விஷயம்'

**வ**க்கீல் ஆபத்சகாயமய்யர் தமது ஆபீஸ் அறையில் உட்கார்ந்து சட்டப் புத்தகம் ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தார். அவருடைய குழந்தை ஸுலோசனா அருகில் நின்று மேஜை மீதிருந்த இங்கிப் பெட்டியின் மூடியைத் திறப்பதற்கு முயன்று கொண்டிருந்தாள்.

''ஏன்னா, ஸுலோச்சு அங்கே இருக்காளா?'' என்று கேட்டுக் கொண்டே அவருடைய தர்மபத்தினி உள்ளே வந்தாள்.

''இதோ இருக்காளே, கண்ணு! ஏண்டி அம்மா, ஆபீஸ் ரூமிலே வந்து அப்பாவைத் தொந்தரவு படுத்தாதேன்னு எத்தனை தடவை சொல்றது?'' என்று சொல்லிக் கொண்டே தானும் பக்கத்தில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தாள்.

''குழந்தை தொந்தரவுபடுத்தினால் படுத்தட்டும். நீ தொந்தரவு படுத்தாதிருந்தால் போதும். இப்போ என்னத்துக்கு இங்கே வந்தே?'' என்றார் வக்கீல்.

''இதென்ன ஆபத்தான்னா இருக்கு? வர வர என்னைப் பார்க்கறத்துக்கே உங்களுக்குப் பிடிக்கலையா என்ன?''

''ஆபத்துதான்; என் பேரே ஆபத்துதானே? இப்பதானா உனக்கு அது தெரிஞ்சுது?''

''போரும், போரும். இந்த அரட்டைக் கல்வியெல்லாம் அந்தப் பம்பாய்க்காரியண்டே கத்துண்டிருக்கேளாக்கும். பேச்சு மட்டும் ஜோரா பேசறதேயொழியக் காரியத்திலே உப்புக்குப் பிரயோஜனம் இல்லை. நான் சொன்னேனே, இந்த விஷயத்தைப்பத்தி ஏதாவது பேசினேளோ, இல்லையோ?''

''என்ன விஷயம் சொன்னே? ஞாபகம் இல்லையே?''

''அது ஏன் ஞாபகம் இருக்கப் போறது? ஊரிலே இருக்கிறவாளெல்லாம்





பயனில்லாத
ஒன்றைக் கொடுத்து
விரும்பிப்
பயன்படுத்தக் கூடிய
பொருளைப் பெற்றுச்
செல்லுங்கள்.









## புதிய ஜைமோ விலையில் ரூ. 1/- தள்ளுபடி

**வ**ழக்கமாக டிடர்ஜெண்ட் வில்லை
உறையைத் தூக்கி எறிந்துவிடுவீர்கள்.
வேண்டாம். அதைக் கொடுத்து,
அதற்கு பதிலாகப் புதிய,
மேம்படுத்தப்பட்ட ஜைமோ வாங்கி
(125 கிராம் வில்லை மட்டுமே) அதன்
விலையில் **ரூ. 1/- தள்ளுபடி** * பெறுங்கள்.
ஜெர்மன் ஃபார்முலா கொண்ட
இந்த டிடர்ஜெண்ட் வில்லை
இப்போது முன்னைவிட அதிக
சிறப்பானது. பயன்படுத்திப்
பாருங்கள், அதன் பிறகு, வேறு
டிடர்ஜெண்ட் வில்லையைப்
பயன்படுத்தும் எண்ணத்தையே
தூக்கி எறிந்து விடுவீர்கள் !

**சிறப்புச் சலுகை**
**ரூ.1/- தள்ளுபடி**
**இச்சலுகை ஏப்ரல் 30, 1994 வரை**

* ஓர் உறைக்கு ஒரு ஜைமோ வில்லை மட்டுமே.
இச்சலுகை தமிழ்நாடு, கேரளம் மற்றும் கர்நாடகத்தில் மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் ஜைமோ கிடைக்கும்.

Henkel

sfc
SPIC Fine Chemicals Ltd.

Mudra : SFC :5976:94/Tam

சொன்னா நினைவிருக்கும். நான் சொன்னா நினைவிருக்குமா?''

''கோவிக்கக்கறயே? என்ன விஷயம்னு இன்னொரு தடவைதான் சொல்லேன்.''

''நம்ம ஸுலோச்ச விஷயந்தான்.''

''என்ன ஸுலோச்ச விஷயம்?''

''உங்களுக்கு எல்லாம் பிரிச்சுப் பிரிச்சுப் சொல்லியாகணும். எங்கேயோ குப்பத்திலே கிடந்த பெண்ணைக் கொண்டு வந்து அந்தப் பம்பாய்க்காரி வச்சிண்டிருக் களே, நம்ம ஸுலோச்சவை வேணும்னா வச்சுக்கட்டும்னு சொன்னேனே?''

''வேணும்னாத்தானே வச்சுக்கணும்? அவ வேணும்னு சொல்லலையே?'' என்றார் வக்கீல்.

''அவளா வந்து வேணும்னு சொல்லு வளா என்ன? நம்ம காரியத்துக்கு நாம்தான் சொல்லணும். சம்பு சாஸ்திரியா, சொம்பு சாஸ்திரியா, அந்தப் பிராமணனுக்கு இருக் கிற துப்புக்கூட உங்களுக்கு இல்லை. நீங்களுந்தான் வைக்கல் பண்ணறயள், வைக்கல்! மாட்டுக்குப் போடற வைக்கல் தான்!'' என்றாள் ஸுலோச்சவின் தாயார்.

''அப்பா! அப்பா! இந்த இங்கிப் புட்டியை நான் எடுத்துக்கட்டுமா, அப்பா!'' என்றாள் குழந்தை ஸுலோச்ச.

''அட சனியனே! இங்கியெல்லாம் எங்கேடி?'' என்றார் வக்கீல்.

''உன் பாக்கெட்டிலே கொட்டிட்டேன், அப்பா!'' என்றாள் குழந்தை.

வக்கீல் திடுக்கிட்டுப் பார்த்தார். அவ ருடைய கோட்டுப் பாக்கெட்டிலிருந்து மை சொட்டிக் கொண்டிருந்தது.

''அசடு! பீடை! சனி!'' என்று வக்கீல் கையை ஓங்கினார்.

''இந்தாங்கோன்னா! அவ அசடா யிருந்தா இருக்கட்டும். அவிலேயிருக்கிற குழந்தையெல்லாம் உங்களுக்குச் சமத்து; ஸுலோச்சதான் அசடு. இந்தாடி அம்மா! நீ இங்கே வா'' என்று அவர் சம்சாரம் குழந் தையைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டாள்.

வக்கீலுக்குக் கோபம் அசாத்தியமாய் வந்தது. மனைவியைப் பார்த்துச் கடக்கட ஏதாவது சொல்லியிருப்பார். குழந்தையை அடிக்க ஓங்கின கையினால் மேஜையைக் குத்தியிருந்தாலும் குத்தியிருப்பார். அந்தச் சமயத்தில் டெலிபோன் மணி அடித்து, காரி யத்தைக் கெடுத்துவிட்டது!

இப்போது டெலிபோன் ரிஸீவரைக் கையில் எடுத்த போதுகூட, கோபமாய்த் தான் எடுத்தார். ''யார் அது?'' என்று அவர் கேட்டபோது முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. ஆனால் அடுத்த கணத்தில் முக பாவம் முழுவதும் மாறிவிட்டது.

''ஓஹோ! உமாராணியா- மன்னிக்க ணும் - என்ன? ஆச்சரியமாயிருக்கே!-




நம்பவே முடியலையே?- இதோ வந்துட் டேன்- ரெண்டு நிமிஷத்திலே அங்கே வர்றேன்.''

இந்த மாதிரி பேசிவிட்டு வக்கீல் பரபர வென்று இங்கியாய்ப் போன சட்டையைக் கழற்றி எறிந்துவிட்டு வேறு சட்டை போட்டுக் கொண்டார். உடனே அவசரமாக வெளியே போகத் தொடங்கினார்.

அவருடைய மனைவி, ''என்ன சங்கதி, இப்படித் தலைகால் தெரியாமல் பறக் கிறேள்?'' என்று கேட்டாள்.

''உமாராணியாத்துக் குழந்தையைக் காணுமாம். அவசரமாய் வரச்சொல்றா. போய்விட்டு வர்றேன்'' என்றார்.

''குழந்தையைக் காணுமா? போச் சுன்னா பீடை விட்டுதுன்னு சொல்லுங்கோ. நம்ம ஸுலோச்சவைப் பத்திப் பேச்சு எடுக்க இதுதான் சமயம். நான் சொல்றது காதிலே விழறதோ இல்லையோ?''

அம்மாள் இப்படிப் பேசிக் கொண் டிருக்கிறபோதே ஆபத்சகாயமய்யர் வெளி யிலே போய்விட்டார். அவருடைய பத்தினி, ''இந்த மாதிரி துப்புக் கெட்டவாள் இந்த உலகத்திலே இருப்பாளோ?'' என்று சொல்லித் தலையில் போட்டுக் கொண் டாள்.

(தொடரும்)



# என்ன காரணம்?

☐ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்துகொள்ள முடிந்தும், அவர்களது கேள்விகளுக்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே ஏன்?

☐ ஆங்கிலத்தில் பேச முயற்சிக்கும்போது, ஒருவிதத் தயக்கமும், தடுமாற்றமும் ஏற்படுகிறதே என்ன காரணம்?

**தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமும், போதிய பயிற்சியின்மையும்தான் இத் தயக்கத்திற்கான மூல காரணங்கள்.**

முறையாகப் பயிற்சி பெற்றால், தேவையற்ற இத்தயக்கம் தானாக விலகிவிடும்.

**ஆம்... விவேகானந்தா கல்வி நிலையம் உளவியல் அடிப்படையில் அளித்துவரும் உரையாடற் பயிற்சியை (Spoken English Practice) நீங்கள் மேற்கொண்டால் போதும்!**

உங்களிடமுள்ள தயக்கம் நீங்கி, சரளமாக ஆங்கிலத்தில் பேசத் தொடங்கிவிடுவீர்கள்.

**இதுவரை மூன்று லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் இப்பயிற்சியின் மூலம் பயனடைந்துள்ளனர்.**

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் பயிற்சி பெறலாம். பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் மட்டும் செலவிட்டால் போதும்!

இன்றே ஒரு போஸ்ட்கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாகக எழுதி அனுப்புங்கள். பயிற்சி பற்றிய விபரங்களை உடனே அனுப்புகிறோம்.

**விவேகானந்தா**
**கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை 600 017

நேர்முகப் பயிற்சி வகுப்புகளும் நடைபெறுகின்றன
(பெண்களுக்கு தனி வகுப்புகள்)



# புருஷனை கைக்குள்ள போட்டுக்கணும்!

தோராயமாகச் சில சம்பவங்களைக் கோர்த்து, கதை என்று பேர் பண்ணி, சஹானில் தண்ணீர் 'ஸ்ப்ரே' பண்ணுவது மாதிரி ஆங்காங்கே சில 'கிச்கிச்சு'க்களைத் தெளித்து, முடிவில் ஒரு நீதி சொன்னால், இன்றைய தேதியில் குடும்பத்தோடு காண வேண்டிய பொழுது போக்குச் சித்திரம். ஒரு வகையில் இன்றைய அடிதடி அராஜகங்களுக்கு இது எவ்வளவோ தேவலை.

டைட்டிலைப் பாருங்கள். தாய்க்குலம் தலை தெறிக்க ஓடி வரமாட்டார்களோ? இயக்குநரின் நோக்கமும் அதுவே. புருஷனை அடக்கி வைத்து ஆள நினைத்தால் விளைவுகள் விபரீதமாயிருக்கும் என்பது இறுதியில் சொல்லப்படுகிற ஈசாப் சமாசாரம்.

'புருஷனை கைக்குள் போட்டுக் கொள்வது எப்படி?' என்று 'அட்வான்ஸ்ட் அக்கௌண்டன்ஸி' சைஸில் ஒரு புத்தகம் - ஸாரி - காவியம் எழுதி, அதை வைத்துக் கொண்டு ஜனகராஜைப் படாதபாடு படுத்தும் மஞ்சுளா; அதை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு போய் எடைக்குப் போட்டு காசு தேர்த்தும் மண்ணாங்கட்டி; இண்டர்காமில் அம்மாவிடம் சமையல் குறிப்பு கேட்டு, புருஷனுக்குப் 'பத்திய விருந்து' படைக்கும் ஸ்ரீஜா; அழகிப் போட்டிக்கு நடுவராகக் கிளம்பி, சாமியார்கள் கூட்டத்தில் சிக்கி, பக்திப் பரவசமாகத் திரும்பி வரும் திமுல்கள் ரவி என ஒவ்வொரு கேரக்டர் அமைப்பிலும் டைரக்டர் செலுத்தியிருக்கிற நுட்பமான கவனத்தை - பாக்யராஜின் சிஷ்யராம் - விளிவாடித்து ரசிக்கலாம். தவிரவும் ஆங்காங்கே தெறிக்கும் சில டைரக்ஷன் உத்திகள். உதாரணமாக, காரசாரமான டெலிபோன் உரையாடலின் நடுவே அறுந்து விழும் டெலிபோன் கம்ப இணைப்பு.

பாராட்ட இத்தனை விஷயம் இருந்தாலும் பாரம்பரியம் மிக்க தமிழ் சினிமா வழிசல்களுக்கும் பஞ்சமில்லை. தம்பதியருக்கு மட்டுமான நாடகம் என்று சொல்லி, திகழும் பல்லவியின் அருவருப்பு நடனம், ஜனகராஜின் 'ஸ்பீடு பிரேக்கர்' ஹாஸ்யம் இன்னபிற.

திடீரென முளைத்து, திடீரென காணாமல் போன எஸ்.ஏ. ராஜ்குமார் (ஞாபகமிருக்கிறதா? புது வசந்தம் புகழ்!) இதில் மறுபடி திடீரென முளைத்திருக்கிறார். முளைத்திருப்பது மட்டுமே செய்தி.

தெளிவான நோக்கமும், குழப்பமில்லாத திரைக்கதையும் படத்தின் மிகப் பெரிய பலம்.

மேடை நாடகப் பாணியை மட்டும் விட்டொழித்தால், டைரக்டருக்கு வளமான எதிர்காலம்.

- ஆர்.பி.ஆர்.




# எலிப் பொறியில் எலி; கடன் கண்ணியில் தேசம்!

சென்ற மாத மத்தியில் நிதி அமைச்சரும் சரி, பிரதமரும் சரி, 'மத்திய பட்ஜெட்டில் உள்ள பற்றாக்குறை பற்றி கவலைப் படவே வேண்டாம்' என்று உள்நாட்டு மக்களுக்கும் அயல் நாட்டு முதலீட்டாளர்களுக்கும் உறுதி அளித்தனர். ஆயினும் நாட்டின் நிதி நிலைமை அப்படி யொன்றும் பிரகாசமாக இல்லை என்பதை நாம் புரிந்து கொள்வது நல்லது. சில யதார்த்த உண்மைகளைக் கவனிப்போம் :

**ப**ட்ஜெட்டையொட்டி வருவாய் பற்றாக்குறை, பட்ஜெட் பற்றாக்குறை, நிதி பற்றாக்குறை என்று பல விதமான பற்றாக் குறைகள் பற்றிப் பேசப்பட்டன. இவை என்ன என்பதை முதலில் புரிந்து கொள்வோம். பிப்ரவரி 28ல் சமர்ப்பிக்கப்பட்ட நடப்பு ஆண்டுக்கான (94-95) பட்ஜெட்டில் வருவாய் பற்றாக்குறை ரூ. 32,727 கோடி! இதன் அர்த்தம் என்னவெனில், பல்வேறு வரி வருவாய்களுக்கும் மேலாக அரசின் செலவினங்கள் இந்த அளவுக்கு அதிகமாக உள்ளன என்பதுதான். அரசின் செலவினங் கள் என்பது வட்டி, பாதுகாப்புச் செலவு

கள், நிர்வாகச் செலவுகள், மாநில அரசு களுக்குத் தரப்படும் மான்யங்கள் போன்றவை. பட்ஜெட்டில் வரி வருவாய் ரூ. 86,084 கோடி. செலவு ரூ. 1,18,811 கோடி. ஆக, பற்றாக்குறை 32,727 கோடி. நமது அரசு வரவுக்கு மேல் செலவு செய்கிறது என்பது பற்றி இப்போது சந்தேகம் ஏதுமில்லை அல்லவா!

**இ**னி பட்ஜெட் பற்றாக்குறை : அரசுக்கு வரி வருவாய் தவிர மூலதன வருவாயும் உண்டு. இது எங்கிருந்து எப்படி வருகிறது? மக்களிடம் கடன் பத்திரங்கள் விநியோகித்துக் கடன் பெறுதல்; உலக வங்கி, சர்வதேச நிதி நிறுவனம் மற்றும் அயல்நாடுகளில் கடன் வாங்குதல்; அரசுத் துறை நிறுவனங்களின் பங்குகளைப் பொது மக்களுக்கு விற்றுப் பெறப்படும் தொகைகள்; சிறு சேமிப்பு, பிராவிடண்ட் ஃபண்டு ஆகியவற்றில் உள்ள மக்களின் பணம் போன்றவை இதில் அடங்கும்.

இவ்வாறு பெறப்படும் மூலதன வருவாயிலிருந்து மூலதனச் செலவினங்கள் நடைபெறுகின்றன. இதில் திட்டச் செலவினங்கள், மாநிலங்களுக்குத் தரப்படும் கடன் போன்றவை அடங்கும்.

மேலே விவரித்த இருவித வருவாய்களையும் இருவித செலவினங்களையும் கூட்டி ஒன்றிலிருந்து மற்றொன்றைக் கழித்தால் கிடைப்பது பட்ஜெட் பற்றாக்குறை :

| | |
|---|---|
| வரி வருவாய்.... | ரூ. 86,084 கோடி. |
| மூலதன வருவாய்.... | ரூ. 59,615 கோடி. |
| மொத்த வருவாய்.... | ரூ. 1,45,699 கோடி. |
| வரி வருவாயில் செலவினம் | ரூ. 1,18,811 கோடி. |
| மூலதன வருவாயில் செலவினம் | ரூ. 32,888 கோடி. |
| மொத்தச் செலவினம் | ரூ. 1,51,699 கோடி. |

ஆக, பட்ஜெட் பற்றாக்குறை ரூ. 6000 கோடி என்று கணக்கிடப்பட்டுள்ளது.

**இ**ந்த இரு பற்றாக்குறைகள் தவிர **நிதி பற்றாக்குறை** (Fiscal deficit) என்றும் பேசப்பட்டது. அது என்ன? நடப்பு ஆண்டுக்கு நிதிப் பற்றாக்குறை மதிப்பீடு ரூ. 54,915 கோடி! இந்தத் தொகை எப்படி கணக்கிடப்படுகிறது?

| | |
|---|---|
| மொத்த வருவாய்... | ரூ. 1,45,699 கோடி. |
| இதில் கடன் பெற்ற தொகை... | ரூ. 48,915 கோடி. |
| மீதி... | ரூ. 96,784 கோடி. |
| மொத்த செலவு... | ரூ. 1,51,699 கோடி. |
| மேற்கண்ட கடன் பெற்ற தொகை போக மீதி வருவாய்... | ரூ. 96,784 கோடி. |
| ஆக, நிதி பற்றாக்குறை | ரூ. 54,915 கோடி. |

நிதி அமைச்சர் இந்த அளவுக்கு நிதிப் பற்றாக்குறையை வரி விதித்து இட்டு நிரப்பாமல் விட்டு வைத்திருக்கிறார். இந்தப் பற்றாக்குறை தன்னால் நிரம்பி விடாது. ஓரளவுக்கு பட்ஜெட்டில் திட்டமிட்டதற்கு அதிகமாகவே வரி வருவாய் கிடைக்கிறது என்று வைத்துக் கொண்டாலும், பெருமளவுக்கு நோட்டு அச்சடித்துத்தான் இட்டு நிரப்ப வேண்டும். இதனால் பணப்புழக்கம் அதிகரிக்கும்போது விலைவாசிகள் மேலும் உயரும்.

**ப**லருக்கும் கவலை அளிக்கும் விஷயம் இந்தப் பற்றாக்குறை விவகாரம் மட்டுமல்ல. மற்றொன்றும் உண்டு :

வரி வருவாயில் செய்யப்படும் செலவினங்களில் முக்கியப் பங்கு வகிப்பது அரசு வாங்கியுள்ள கடன்களுக்கான வட்டி. இது நடப்பு ஆண்டுக்கு ரூ. 46,000 கோடியாக உள்ளது. அதாவது, வரி வருவாயில் 53 சதவீதம் வட்டி கொடுக்கவே சரியாய்ப் போய்விடுகிறது! அரசின் கடன் சுமை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. 1980/81 ல் ரூ. 30,864 கோடியாக இருந்த கடன் 31.3.94 முடிய ரூ. 2,42, 729 கோடி! மேலும் நடப்பு ஆண்டிலும் அரசு கடன் வாங்க, 31.3.95 முடிய இத்தொகை ரூ. 2,77,561 கோடியாக இருக்கும்!

எலிப்பொறியில் எலி சிக்குவது போல, நமது தேசம் கடன் கண்ணியில் சிக்கப் போகிறது என்பது பலரது கருத்து. நமது வருங்கால சந்ததியினருக்கு மிகப் பெரிய கடன்சுமையை உருவாக்குகிறோம். மேலே விவரித்த உள்நாட்டுக் கடன்கள் போக, அயல் நாட்டுக் கடன்கள் வேறு 90 பில்லியன் டாலர் இருக்கிறது. அதாவது ரூ. 2,70,000 கோடி. உள்நாட்டு, வெளிநாட்டுக் கடன்களைக் கூட்டினால் ரூ. 5,47,000 கோடி!

அரசின் வரி வருவாய் வட்டி செலுத்தவே போதாத நிலை விரைவில் தோன்றும். அப்போது வட்டி செலுத்தவே கடன் வாங்க நேரும்.

குடும்பத் தலைவன் ஒருவன் தனது முந்தைய கடனைத் திருப்பித் தரப் புதுக் கடன் வாங்கினால் உற்றமும் சுற்றமும் புத்தி சொல்லி எச்சரிக்கலாம்.

ஆனால் இந்த அரசு எந்த எச்சரிக்கைகளையும் ஏற்றுக் கொள்வதாகத் தெரியவில்லையே, அதுதான் பேராபத்து!

– வி. கோபாலன்.




# பேனசிருக்குத் தமிழன் நடத்தும் அரசியல் பாடம்!

பேனசிர் புட்டோ அவர்களுக்கு,

இந்தியா மீது மனித உரிமை மீறல் தீர்மானமெல்லாம் கொண்டு வந்து, கடைசியில் வாபஸ் வாங்கிக்கும்படி ஆயிருச்சேன்னு நீங்க ரொம்ப நொந்து போயிருக்கீங்களாம்; கேள்விப்பட்டேன். கவலைப்படாதீங்க. மறுபடியும் ஐ.நா. சபையின் மனித உரிமைக் குழு முன்னால் போங்க. காஷ்மீர்ல ஒருவேளை மனித உரிமைகள் இந்தியாவால் மீறப்படாமல் இருக்கலாம்; ஆனால் இந்தியாவின் இதர பாகங்களிலே நிச்சயமா மீறப்படுதுன்னு ஒரு போடு போடுங்க. 'எப்படி?'ன்னு கேட்பாங்க. நான் சொல்லித் தரேன். தெரிஞ்சுக்குங்க:

● பல்லவனுக்காக அல்லது அம்பேத்கருக்காக மணிக்கணக்கில் பைத்தியக்காரன் மாதிரி காத்துக் கொண்டிருக்கும்போது இடிக்கும்படி வந்து, நிற்காமல் போய் விடுகிறதே, அது மனித உரிமையை மீறும் செயலில்லையா? டிக்கெட் வாங்கி விட்டு பாக்கிச் சில்லறையைக் கேட்கும் உரிமையைப் பயன்படுத்தும் துணிவு எத்தனை பயணிகளுக்கு இருக்கு? ''சில்லறை இல்லாம ஏறிட்டு, ஏன்யா எங்க கழுத்தறுக்கறீங்க?'' - என்ற திட்டையும் வாங்கிக் கொண்டு சில்லறையையும் இழக்கிறோமே!

சத்யா

● ஃபோன் செய்யும் போதெல்லாம் சரியான நம்பர் கிடைத்து விடுகிறதா? குறைந்த பட்சம் ஆறு ராங் நம்பர் கிடைப்பதோடு, அதற்கும் சேர்த்துக் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறதே, இந்த உரிமை மீறல் பற்றி உலக நாடுகள் கவலைப்பட்டதுண்டா?

● எப்போது ரிலீஸ் ஆயிற்று என்றே தெரியாத சினிமாப் படங்கள் எல்லாம் தொலைக் காட்சியில் வழக்கமாக ஒளிபரப்பப்பட்டு கட்டாயமாக அதைப் பார்த்துத் தொலைக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிறோமே, லட்சக்கணக்கான தமிழர்கள். இந்த மனித உரிமை மீறலை, உங்களுக்குப் புத்தி சொன்ன சரான் என்றைக்காவது தட்டிக் கேட்டதுண்டா?

● வேலை வாய்ப்பு நிறுவனத்தில் பதிவு செய்து விட்டு, ரிடையராகும் வயதைத் தாண்டிய பிறகும் இண்டர்வியூவே வருவதில்லையே, அது வேலையில்லாதவர்களின் உரிமையைப் பறிக்கும் செயல் என்று அடித்துச் சொல்லாத சீனா, உங்களுக்கு மாத்திரம் தீர்மானத்தை வாபஸ் வாங்கும்படி உபதேசம் செய்ததே, ஏன்?

● 'சிந்தாதிரிப்பேட்டை போக வேண்டும்' என்று ஆட்டோ டிரைவரிடம் கேட்கும் போது 'போவாது ஸார். வண்டி சைதாப்பேட்டைக்குப் போவுது' என்று மறுப்பதில் உள்ள மனித உரிமை மீறல் தான் ஐ.நா.வின் கண்களுக்குத் தெரியவில்லை; 'காலங்கார்த்தால வண்டியிலே ஏறிட்டு, மீட்டருக்கு மேலே கொடுக்காம கம்பி நீட்டறான் பாரு, சோமாறி' என்பதில் உள்ள மனித உரிமை மீறல் கூடவா அதன் அறிவுக்குப் புலப்படவில்லை? இது விஷயமாக உலக நாடுகள் வாய் திறக்காதது ஏன்? ஆட்டோ டிரைவர்களிடம் அவ்வளவு பயமா?

"நம்ப மானேஜர் இன்னைக்கு 'சம் திங் ராங்... சம்திங் ராங்'னு சொல்றாரே, என்ன விஷயம்னு தெரியுமா சார்?"
"சம்திங் வாங்கினதுல ஏதாவது தவறு நடந்திருக்கும்!"

- சீர்காழி வி. ரேவதி







"ஏன் தம்பி! உனக்கு என்ன வேணும்?"
"நான் எங்க அப்பாவையும் அம்மாவையும் டைவர்ஸ் பண்ணணும்!"

- கார்த்திக் ராஜா

● வாரத்துக்கு இரண்டு முறையாவது வாகனங்களில் செல்வோர் டிராஃபிக் போலீஸாரால் தடுக்கப்பட்டு, அண்ணா சாலைக்குப் போக விரும்புகிறவர்கள் அம்பத்தூர் எஸ்டேட் பக்கம் அனுப்பி வைக்கப்படுகிறார்களே, இந்த அவஸ்தைக்கு என்று விடிவு காலம்?

இப்படி தமிழ் நாட்டில் மட்டுமின்றி, இந்தியா முழுவதிலும் நடக்கும் எத்தனை எத்தனையோ மனித உரிமை மீறல்களைப் பற்றி எங்கிட்ட கத்துக்குங்க. ஐ.நா. மனித உரிமைக் குழு முன்னால் எடுத்து விடுங்க. அசந்து போயிருவாங்க.

அப்ப, அங்க வாஜ்பாய் தலைமையில் வாதாட ஒரு குழு வரும். அது என்ன சொல்லும் தெரியுமா? "இப்படிப்பட்ட சில மனித உரிமை மீறல்கள், எல்லா நாட்டிலேயும்தான் நடக்கும்; ஏன், பாகிஸ்தானில் மீட்டருக்கு மேல் போட்டுக் கொடுக்கச் சொல்லும் ஆட்டோ ஓட்டியே கிடையாதா? மக்களுக்குப் பிடிக்காத நிகழ்ச்சிகள் சில டி.வி.ல வருவதே கிடையாதா?" அப்படீம் பாங்க.

நீங்க உடனே பயந்து போய் தீர்மானத்தை வாபஸ் வாங்கிடக் கூடாது. "நான் பாகிஸ்தானில் இத்தகைய மனித உரிமை மீறல்கள் இல்லை என்றா சொன்னேன்? இந்தியாவில் இருக்கிறது என்றுதானே கூறுகிறேன்?" என்று அழுத்தமா ஒரு போடு, போடுங்க! அப்புறம் வாஜ்பாய், சால்மன் குர்ஷித் என்ன, உங்களுக்குப் பக்க பலமா நின்னு உங்களைத் தூண்டி விடும் க்ளிண்டனே அசந்து போய் மயங்கியே விழுந்துடுவாரு!

இப்படிக்கு,
மனித உரிமைகள் பலவற்றைப்
பறி கொடுத்து விட்டு நிற்கும் தமிழன்.

# அசிங்கம்

## சத்யா ஸ்ரீனிவாசன்

மிக மிக அசிங்கமாக உணர்ந்தான் கருமாரன். அவமானம் பிடுங்கித் தின்றது அவனை. தலையை உயர்த்திப் பார்க்கவே வெட்கமாயிருந்தது. தங்கப் பதக்கம் சிவாஜியைப் போல் கம்பீரமாக இருந்த 'இன்ஸ்பெக்டர்', தன் எதிரே இருந்தவர்களைக் கெட்ட வார்த்தைகளில் திட்டிக் கொண்டிருந்தார்.

''என்னையா படிச்சிருக்கீங்க நீங்க எல்லாம்? இப்படி நாய் மாதிரி அலையறீங்களே? உங்களுக்கெல்லாம் வெட்கமா இல்லே...? அவ்வளவு தினவு எடுக்குதே? ஒவ்வொருத்தன் மூஞ்சியைப் பாரு எப்படி இருக்கு...? இது மாதிரி இடங்களுக்கு வர அசிங்கமாக இல்லே?''

நாக்கைப் பிடுங்கிக் கொள்ளும்படியாக கேட்டுக் கொண்டிருந்தார் அவர். கருமாரனுக்கு உயிரே போய்விடும் போல் இருந்தது.

கருமாரன் மிகவும் ஒழுக்கமான இளைஞன். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன். தினமும் 108 காயத்ரீ ஜபம் செய்பவன். ஒரு தப்புதண்டாவுக்கும் போகாதவன். சினிமாகூட அதிகம் பார்க்க மாட்டான். எப்போதாவது ரஜினி படங்கள் பார்ப்பதோடு சரி. மற்றபடி திருச்சி வட்டாரங்களில், ஒரு 'மாதிரியான' படங்கள் வரும் தியேட்டர் பக்கம் அவன் போனதே இல்லை. பஸ்ஸில் போகும்போது போஸ்டர்களைப் பார்ப்பான். 'அந்தப்' படத்திற்குப் போக வேண்டும் என்று ஆசை ஏற்பட்டாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வான். 'அதெல்லாம் தப்பு; முதல்லே சினிமா பார்க்கச் சொல்லும். அப்படியே தப்பு காரியங்கள் பண்ணத் தூண்டும்' என்ற சரியான எண்ணம் ஒரு புறம். 'நமக்குத் தெரிந்தவர்கள் யாராவது நம்மை அங்கே வைத்துப் பார்த்துவிட்டால் அசிங்கமாகப் போய்விடுமே' என்ற பயம் ஒரு புறம். எதற்கு வீண் 'ரிஸ்க்' என்று விட்டுவிடுவான்.

அப்படிப்பட்டவன்தான் இன்று இக்கட்டான சூழ்நிலையில் சிக்கிக் கொண்டு அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான்.

ஒரு அலுவல் விஷயமாக நாமக்கல்லுக்கு வந்திருந்தான் கருமாரன். அங்கே வேலை முடிந்ததும் பஸ் பிடிப்பதற்காகக் காத்து நின்றிருந்த போதுதான் அந்த கவர்ச்சிகரமான போஸ்டர் அவன் கண்களில் பட்டது. அது ஒரு மலையாள சினிமாப் பட போஸ்டர்.

போஸ்டர் முழுவதையும் 'A' என்ற ஆங்கில எழுத்து, பெரிதாக சிவப்பு வண்ணத்தில் ஆக்ரமித்துக் கொண்டிருந்தது. கீழே 'செக்ஸ் காட்சிகள் நிறைந்த மலையாளப்படம்' என்ற அறிவிப்பு.

கருமாரனுக்கு லேசாகச் சபலம் ஏற்பட்டது. 'திருச்சி என்றால் நமக்குத் தெரிந்தவர்கள் நிறையபேர் இருக்கிறார்கள்; யாராவது பார்த்து விட்டால் அசிங்கம் என்ற பயம். இங்கே நம்மைத் தெரிந்தவர்கள் யார் இருக்கிறார்கள்? இந்தப் படங்களில் அப்படி என்னதான் காட்டுகிறார்கள்? ஒரு தடவை பார்த்துவிடலாமே!' என்று தோன்றியது.போஸ்டரைப் பார்க்கப் பார்க்க அந்த எண்ணம் வலுப்பட, தன் எண்ணத்தை செயலாக்கத் தொடங்கினான்.

டிக்கெட் வாங்கிக் கொண்டு கதவுக்குப் பக்கத்தில் இருந்த முதல் வரிசையில் அமர்ந்து கொண்டான். கருமாரன்.

படம் ஓடிக் கொண்டிருந்தது. அவன் நினைத்த மாதிரி காட்சிகள் எதுவுமின்றி, ஒரு கலைப்படம் போல் ஓடிக் கொண்டிருந்தது.

'ப்பூ' இவ்வளவுதானா...? சும்மா போஸ்டர்களைப் போட்டு ஜனங்களை ஏமாத்தறாங்க போலிருக்கு' என்று அவன் நினைத்துக் கொண்டிருந்த போது



முன்னாலிருந்து வந்து குரல்கள் அவன் சந்தேகத்தை தீர்த்தன.

''என்னடா. ஒரு சீனும் காணோம். பேசாம பக்த பிரகலாதா படத்துக்குப் போயிருக்கலாம்'' என்று ஒருவன் அலுத்துக் கொள்ள, ''இப்பல்லாம் போடமாட்டாங்கடா. இண்டர்வெல்லுக்கு அப்புறம் பார். சும்மா ஒரு பத்து நிமிடம் தான் வரும். இது மாதிரி நீ உன் வாழ்க்கை யிலேயே பார்த்திருக்க மாட்டே....'' என்றது மற்றொரு குரல்.

'ஓ அப்படியா' என்று நினைத்த கருமாரன் இருக்கையில் நன்றாகச் சாய்ந்து அமர்ந்து கொண்டான்.

அப்போதுதான் அது நடந்தது.

'பட்'டென படம் நிற்க, பளீரென விளக்குகள் எரிய ஆரம்பித்தன. படார் படாரென கதவுகள் திறக்கப்பட, வெளியே ஒவ்வொரு வாயிலுக்கு அருகேயும் போலீஸ்.

குழப்பமும் திகிலுமாக ரசிகர்கள் வெளியே வர,

'திக்' கென்றது கருமாரனுக்கு.

'இது என்னடா வம்பு? நம்மையும் விடமாட்டார்களோ? கேஸ் புக் பண்ணி விடுவார்களோ?' என்ற எண்ணம் தோன்ற, 'சே! ஏன்தான் நம் புத்தி இன்று இப்படிப்போயிற்றோ' என்று தன்னையே நொந்து கொண்டான். மற்றவர்களுடன் சேர்ந்து அவனும் வெளியே வந்து ஒரு ஓரமாக நின்று கொண்டான்.

நிதானமாக யோசித்ததில் அவனுக்கு உண்மை புரிந்தது. 'இது ஒரு லைசென்ஸ் பெற்றுள்ள தியேட்டர். நாம் பார்க்க வந்திருப்பதும் விளம்பரம் செய்யப்பட்டுள்ள படத்துக்குத்தான். தியேட்டர்காரர்கள் ஏதாவது தப்பு தண்டா பண்ணி ஏடாகூடமாகப் படங்கள் போட்டால் அதற்கு ரசிகர்கள் எப்படி



ஒரு நிமிடத்திற்கு நம்மால் எத்தனை சொற்களைப் பேச முடியும்?

நூறு சொற்களைப் பேசுவதே கடினமான வேலை. காரணம் தமிழ் மொழியிலுள்ள சொற்களின் அமைப்பு அப்படி. ஆனால் ஒரு நிமிடத்திற்கு முன்னூற்றைம்பது சொற்களைப் பேசக் கூடிய மொழியும் உண்டு.

அதுதான் பிரெஞ்சு மொழி.

ஜப்பானிய மொழியும், ஜெர்மானிய மொழியும் அடுத்த இடத்தைப் பெறுகின்றன.

- எஸ். முகம்மது யூசுப்

---

பொறுப்பாவார்கள்?' என்ற கேள்வி எழ கூடவே, 'கிட்டத் தட்ட அறுநூறு பேருக்கும் அதிகமாயுள்ளனர். இத்தனைபேர் மீதுமா கேஸ் போட முடியும்? என்ற எண்ணமும் ஏற்பட்டது. கொஞ்சம் தைரியமாக என்ன நடக்கிறது என்று பார்க்க ஆரம்பித்தான்.

இன்ஸ்பெக்டரின் அர்ச்சனை தொடர்ந்து கொண்டிருந்தது. இன்னும் ஒருவர் முதலாளியின் அறைக்குள் சென்றார். அவர் பெரிய ஆபீஸர் போல் தெரிந்தார். மப்டியில் இருந்த அவருக்கு, போலீஸார் 'சல்யூட்' செய்வதையும் பார்த்தான். நிறைய போலீஸ் தலைகள்.

'என்ன ஸார், எங்களுக்கு என்ன ஆகும் ஸார்?' என்று பயந்தபடி கேட்ட ஒருவனை,

'உங்களுக்கெல்லாம் ஒண்ணும் ஆகாது ஸார். அட்ரஸ் வாங்கி வச்சுப்போம். கோர்ட்டுக்கு வந்து 'சாட்சி சொல்லணும். அவ்வளவுதான். அதுகூட எல்லாரையும் கூப்பிட மாட்டோம். யாராவது பத்து பதினைஞ்சு பேர்கிட்டே மட்டும் அட்ரஸ் வாங்கிப்போம்' என்று கான்ஸ்டபிள் ஒருவர் கூறிக் கொண்டிருந்ததைக் கேட்ட கருமாரனுக்கு நிம்மதி ஏற்பட்டது. அவர்கள் தேர்ந்தெடுக்கும் பத்து பதினைந்து பேர்களில் தான் ஒருவனாக மாட்டிக் கொள்ளக் கூடாதே என்ற லேசான கவலை ஏற்பட்டது. மெதுவாக யார் கண்ணிலும் படாமல் வெளியே சென்றுவிட முடியுமா என்று பார்த்தான். ...ம்.நோ சான்ஸ். 'கேட்'டுக்கு அருகே நின்றிருந்த போலீஸார் எல்லோரிடமும் அட்ரஸ் கேட்டு வாங்கிக் கொண்டிருந்தனர். அட்ரஸ் கொடுக்க விரும்பாதவர்கள், காவலர்களின் கையில் 'நோட்டுக்களை' திணிப்பதையும் பார்த்தான். 'அடப்பாவிகளா' என்று நினைத்த கருமாரன், இதையெல்லாம் இன்ஸ்பெக்டர் கவனிக்கிறாரோ என்று திரும்பிப் பார்த்தான். நடப்பதையெல்லாம் ஓரக் கண்ணால் பார்த்தபடி அவர் இருப்பதும் தெரிந்தது. அப்போது தியேட்டர் முதலாளியின் அறையிலிருந்து வெளியே வந்த 'மப்டி' ஆபீஸரின் வாயெல்லாம் பல். இரண்டு அதிகாரிகளும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகையைப் பரிமாறிக் கொண்டனர். சிரித்த முகத்துடன் பவ்யமாக நின்று கொண்டிருந்தார் தியேட்டர் முதலாளி. போலீஸ்காரர்களின் கைகள் நிறைந்திருந்தன.

கருமாரனுக்குப் புரிந்தது. இது ஒரு நாடகம்! பணம் பண்ண நடந்த நாடகம்.

''அதெல்லாம் ஒண்ணும் பண்ண மாட்டாங்கடா. சும்மா காசு வாங்கிட்டு போயிருவாங்க. இப்பவே இன்னும் கொஞ்ச நேரத்துலே படம் அமர்க்களமா ஓடும் பாரு!'' என்று கிராமத்தான் போல் தோன்றிய ஒருவன் தன் அருகில் இருந்தவனிடம் கூறிக் கொண்டிருந்ததைக் கேட்ட கருமாரனுக்கு, 'சே! நாட்டில் ஊழலும் லஞ்ச லாவண்யமும் எவ்வளவு தூரத்திற்குப் பரவியிருந்தால், சாதாரண ஜனங்கள் கூட இப்படி வெளிப்படையாக, சகஜமாகப் பேச முடிகிறது' என்று வேதனைப்பட்டான்.

இப்போது அவனுக்குத் தன்னை விட, தியேட்டர் முதலாளியை விட காவலர்களே மிக அசிங்கமாகத் தெரிந்தார்கள்.

---

முழுக்க முழுக்க சர்க்கரையாக இருந்து விடாதே; உலகம் உன்னை விழுங்கிவிடும். முழுக்க முழுக்க எட்டிக்காயாக இருந்து விடாதே; உலகம் உன்னை உமிழ்ந்து விடும்.

- பாரசீகப் பழமொழி

தகவல் : வயலூர் இராம பார்த்திபன்



# இன்றைய ஸ்பெஷல்!




"இன்றைய ஸ்பெஷல் : பூபதி இட்லி, கிருஷ்ணன் தோசை'ன்னெல்லாம் எழுதியிருக்கே! என்ன அது?"

"காசு தராம சாப்பிட்டதுக்குத் தோசை, இட்லிக்கெல்லாம் மாவாட்டினவங்க பேராம்!"

- விஜயகுமார்.



"சுத்தமான தமிழ்ல பேசாதீங்க தலைவரேன்னு சொன்னா கேட்டாத்தானே!"

"ஏங்க, என்னாச்சு?"

"தமிழைக் கொலை செய்யாதே'ன்னு கூட்டத்தில எல்லாரும் கத்துறாங்க!"

- உ.ர. சங்கர்.

"உங்க போஸ்ட்மேன் கடிதங்களைச் சிரிச்சுக்கிட்டே கொடுப்பாரா.. அலட்சியமா போட்டுட்டுப் போவாரா?"

"திரும்பி வரும் கதைகளை மட்டும், என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கும் வகையில், கூப்பிட்டுக் கையில் கொடுத்துட்டுப் போவார்!"

- ராஜிராதா.



"நம்ம தலைவர் எதற்காகக் கற்பனை வளம் மிக்க ஒரு எழுத்தாளரைத் தேடறார்?"

"எதிர்க் கட்சி மேலே புதுசு புதுசா ஊழல் குற்றச்சாட்டுக்களைக் கற்பனை செய்து தரத்தான்!"

- கே.வி.





"'அன்பில் உயர்ந்தவள் அன்னையா, மனைவியா'ன்னு நடந்த பட்டி மன்றத்திலே அன்னையே அப்படின்னு தீர்ப்புக் கூறினாரே, அந்த நடுவர் இப்போ எங்கே இருக்கார்?"

"ஆஸ்பத்திரியில்!"

- து. பூவராகன்.

"நம்ப கட்சி ஆளுங்க பொழைக்கப் போகட்டுமேன்னு ரெண்டு பேருக்கா பிரிச்சு டெண்டர் விட்டது தப்பாப் போச்சு!"

- கார்த்திக் ராஜா.



# ஜி.விசுவநாதனைத் தாமரைக்கனி சட்டசபையில் தாக்கியது பற்றி..?

● ச.செந்தில் வேலன், சங்கராபுரம்

*? மயிலாடுதுறையை நியூயார்க்காக மாற்று வேன் என்று மணிசங்கர அய்யர் கூறியுள்ளாரே?*

! 'துபாயாக மாற்றுவேன்' என்று கூறி, எம். பி. ஆனார். இப்போ, 'நியூயார்க் ஆக மாற்றுவேன்' என்கிறாராக்கும். சரி, எப்பத்தான் மயிலாடுதுறையாக மாற்றுவாராம்?

● என்.ஆறுமுகம், பரமக்குடி

*? நரசிம்மராவ் வெற்றிகரமாக 1000 நாட்கள் ஆட்சி செய்து முடித்திருப்பதைக் காங்கிரஸார் கொண்டாடப் போகிறார்களாமே?*

! அரசியலில் சினிமா கலாசாரம் இரண்டறக் கலந்து போயிருக்கிறது. சினிமா தொடர்பில்லாமல் பதவிக்கு வந்தவர்கள் கூட சினிமா பாணியில் சிந்திக்க ஆரம்பித்து விட்டார்கள்.

● ஹஜ் பிரியன், ரெட்ஹில்ஸ்.

*? இம்ரானின் வேண்டுகோளை ஏற்று கபிலின் சாதனையை முறியடிக்க நான் மீண்டும் ஆடப் போவதில்லை என்று ஹேட்லி கூறி, இம்ரான் முகத்தில் கரி பூசிவிட்டாரே?*

! அதைவிட கபிலை நேரில் சந்தித்துப் பாராட்டி அத்தர் பூசியதுதான் ஹேட்லியின் பெருந்தன்மை!

● வி.பி.மகராசி, மதுரை

*? பிளஸ் டூ தேர்வில் காசு வாங்கிக் கொண்டு மாணவர்களைக் காப்பி அடிக்க உதவி செய்த ஆசிரியர்களுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்?*

! ஏங்க, காசு கொடுத்துப் பதவிக்கு வந்தா,

● 'நியூயார்க் ஆக்குவேன்!'



● ஆயிரம் நாட்கள்!



அந்தக் காசை திருப்பி எடுக்க வேணாமுங்களா? இந்த மாதிரி சூழ்நிலை உருவாக வழி வகுத்த அரசியல்வாதிகளுக்குத் தண்டனை கொடுங்க முதல்ல.

● ஆர்.விஜி. அரகண்ட நல்லூர்.

*? வன்முறையை ஒழிக்கவும் ஊழலைத் தடுக்கவும் நமது நாட்டில் ராணுவ ஆட்சி ஒன்றுதான் வழி என்கிறேன். சரிதானே?*

! அப்புறம் ராணுவத்தின் அடக்குமுறையும் ஊழலும் அடக்க முடியாமல் பெருகிடுங்களே. அடங்கிப் போறது நாமாகத்தான் இருக்கும். இப்பவாவது வாய்விட்டுப் பேசி வயிற்றெரிச்சலைத் தணிச்சுக்க முடிகிறது.

● தெ. க. திலீபன், வத்ராயிருப்பு

*? சட்டசபையில் முன்னாள் அமைச்சர் ஜி.விசுவநாதனை, தாமரைக்கனி தாக்கியுள்ள சம்பவம் பற்றித் தங்கள் கருத்து?*

! ஓர் ஐடியா. தாமரைக்கனிக்குத் தனியாக ஒரு ஸீட் கொடுத்து, சபாநாயகர் மாதிரி தன்——னி உட்கார வைத்து விடலாமே! என்ன, சட்டசபைத் தொடரின் முதல் நாளன்றே ஒரு கலாட்டா நடந்து, பரபரப்

● தாக்கப்பட்ட.....



● ....சம்பவம்



பாக நாம் பத்திரிகையைப் பார்த்துக் கிளுகிளுக்க முடியாமல் போய்விடும், அதான்.

● கே. குமார், சீர்காழி.

*? சட்டசபைக் கூட்டத்தொடரின்போது ஆளுனர் தமது உரையில் "முதல் அமைச்சர் டாக்டர் ஜெயலலிதா" என்று பதினேழு முறை குறிப்பிட்டிருப்பது பற்றி...?*

! ஒண்ணுமில்லை; புரட்சித் தலைவின்னு ஒரு தடவை கூடக் கூப்பிடாததற்குக் காம்பன்சேஷன் - அவ்ளோதான்!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன் கோட்டை.

*? சினிமாவில் வன்முறை, ஆபாசம் காட்டுவதை உடனே நிறுத்தவேண்டும்; இல்லையேல் கடுமையான நடவடிக்கை என்று அமைச்சர் தென்னவன் கூறியுள்ளாரே?*

! தென்னவன் நினைத்தால் செய்யக் கூடிய காரியமா இது? இல்லையே! ஆனா

# நீங்கள் கேட்டவை
## - தராசு

பாருங்க, நாடாளுமன்ற பெண் எம். பி.க்கள் எதிர்ப்புக் குரல் எழுப்பவும் சென்ஸா ருங்க அரண்டு போய், கத்திரிக்கோலைச் சாணைப் பிடிச்சிருக்காங்களாம். பலமா வெட்டு விழுதாம். படத் தயாரிப்பாளர்கள் கலகலத்துப் போயிருக்காங்களாம்!

● இரா.திலீப், திருச்சி.

*? தமிழ் நாட்டு உப தேர்தல்களில் சு.சுவாமி யின் ஜனதா கட்சி போட்டியிடப் போகிற தாமே...? அ.தி.மு.க., தி.மு.க.வுக்கு டெபா ஸிட் கிடைக்குமா?*

! இந்தக் கிண்டல்தானே வேணாங்கறது. இதுக்குத்தான் மூன்றாவது அணின்னு வாழப்பாடியார் தலைகீழா நின்னு பார்க் கிறார். தேர்தலுக்கு இருக்குதே, இன்னும் ரொம்ப நாளு. அதுக்குள்ள என்னென்ன நடக்குதோ, பார்ப்போம்.

● மா. பழனிசாமி, கோவை.

*? ஜெ.மீது ஊழல் புகார் கொடுக்க வந்த வர்களிடம் 'உங்கள் முயற்சி வெற்றி பெற வாழ்த்துக்கள்' என்று தமிழக கவர்னர் கூறியது குறித்து...?*

! அது ஒன்னுமில்லைய்யா, முடிவு தம்மிடம் இல்லை; டில்லிலதான் இருக் குன்றதை அப்படி டிராமாடிக்கா பேசியிருக் கார்; அதைப்போய் குற்றம் சொல்லிக் கிட்டு...

● எம். அசோக் ராஜா. அறவக்குறிச்சிப்பட்டி.

*? 'ஜெயலலிதா நினைத்தால் எல்லா காங் கிரஸ் எம்.எல்.ஏ.க்களையும் விலைக்கு வாங்கி விட முடியும்' என்று சிங்காரம் எம்.எல்.ஏ. கூறி யிருப்பது பற்றி...?*

! அம்மாகிட்ட அம்புட்டுப் பணம் குவிஞ்சு கிடக்குன்றதைப் புரிஞ்சுக்கணும் னேன்.

● சந்தனப் பிரியன், சித்தோடு.

*? 'கருணாநிதியின் தகுதிக்கு முதலமைச்சர் பதவி சாதாரணமானது என்று அன்பழகன் கூறி யுள்ளதன் பொருள் என்ன?*

! மறுபடி தப்பித் தவறி தி.மு.க. ஆட்சிக்கு

● காம்பன்சேஷன்!

● மலைக்க வைத்தவர்





வந்தால் மற்றவங்களுக்கு விட்டுக் கொடுங் கன்னு நாசூக்காகக் கேட்டுக்கறார்!

● த.இளஞ்சேரன், கொளப்பாடு.

*? சமீபத்தில் தாங்களே மலைத்துப்போன நிகழ்ச்சி!*

! மணச்சநல்லூர் கல்கி ஏஜெண்ட், அரங்க ராசனின் துணிவு. தமது மறைவுக்குப் பின் தமது உடல் மருத்துவக் கல்லூரி உடல்கூறு பிரிவில் மாணவர்களுக்கு ஆய்வுக்கு உதவ வேண்டும் என்றும் கண்கள் பார்வையற்றவ ருக்கு என்றும் எழுதி வைத்ததுடன், 'உடல் ஒப்படைக்கப்படும் வரை யாரும் அழக் கூடாது' என்றும் கட்டளையிட்டு மறைந் தார்! அவ்வாறே நடந்தது.

● பொன்மலை, திருச்சி.

*? ஜெயலலிதா வருகிறார் என்பதால் சாலை நெரிசலைத் தவிர்க்க, பிளஸ் டூ தேர்வு எழுத விருந்த மாணவர்களை முதல் நாள் இரவே பள்ளிக்கு வந்துவிடுமாறு கூறியுள்ளனரே,*

● ஒரே குரலில்....,

● உட்பொருள் என்ன?





*நியாயமா?*

! அநியாயத்தினிடையிலும் ஓர் ஆறுதல்! ஏதோ இந்தமட்டிலாவது மாணவர்களிடம் அக்கறை கொண்டு அறிவுரை வழங்கினார் களே என்பதுதான்.

● க. சேகர், செங்குன்றம்.

*? எல். கே. அத்வானி என்ன செய்கிறார்?*

! மறுபடி ஹிந்துத்வா பஜனை தொடங்கி யிருக்கிறார்.

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84. ☐

*? ஜெனீவா, மனித உரிமைக் கமிஷன் மாநாட் டுக்கு இந்தியக் குழுவின் தலைவராக வாஜ் பாயியைப் பிரதமர் நியமித்தது ராஜதந்திரமா? பெருந்தன்மையா?*

! பாகிஸ்தானின் குற்றச்சாட்டை மறுத்து இந்தியா ஒரே குரலில் பேசுகிறது என்ப தற்கு அடையாளம், எதிர்க்கட்சித் தலை வரின் நியமனம். அதோடு அயல் விவகாரத் துறையில் மந்திரியாக இருந்தவரின் அனு பவ அறிவைப் பயன்படுத்திக் கொள்ளும் எண்ணம். ஆகமொத்தம் ராஜதந்திரம்தான் தூக்கலாக இருக்கிறது!

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஜோ. பன்னீர்செல்வம்,
அறை 4, 21. டாக்டர் அழகப்பா ரோடு.
சென்னை - 84.

## வட்டமேஜை

# வாழைப்பழத்தில் உலக்கை ஏற்ற முடியுமா?

◆ மக்களின் ஆதங்கத்தை இத்தனை நக்கலாக, நகைச்சுவையோடு கூற முடியுமா? ஆச்சரியம் தான். அசத்தலான தலையங்கம். விலைவாசி உயர்வும், மற்ற பிற அழுத்தங்களாலும் சுதந்திரமாக சுவாசிக்கக்கூட முடியாத பாரத்தோடு தள்ளாடும் பாமரனுக்கு, தன் தலைவியின் பகட்டு ஆடம்பர ஜம்பங்கள் கசக்கவே செய்யும். ஜால்ரா சப்தத்தில், புகழ் போதையில் நாளெல்லாம் மிதந்து கொண்டிருந்தார், இன்று ஆகாயத்தில் சொகுசாகப் பறக்கப் போகிறாராக்கும். பறக்கட்டும்.

திருச்சி, தாயு. செந்தில் குமார்.

◆ வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுபவர்கள் பார்த்திருக்கின்றேன். உலக்கையைக் கூட ஏற்ற முடியும் என்பதனை இவ்வாரத் தலையங்கம் படித்துத் தெரிந்து கொண்டேன்!

அரகண்டநல்லூர், ஆர். விஜி.

◆ அம்மா தனி விமானம், வாங்கியதில் யாருக்கு நன்மை இருக்கிறதோ, இல்லையோ சென்னை மாநகரத்திற்கே டிராஃபிக்கிலிருந்து விடிவுகாலம் பிறந்து விட்டது. அந்த வகையில் சென்னை நகர மக்கள் அம்மாவுக்கு நன்றிக் கடன் பட்டுள்ளனர்!

திருச்சி - 8, நளினி.

◆ சினிமாவிலும், டீ.வியிலும் வருகிற போலி துப்பாக்கி வெடிச்சத்தங்களைக் கேட்டுக் கேட்டு, ஒரு அலட்சியம் மனத்தில் படிந்து விட்டது. ஞான உஸ்வி கிருஷ்ணன், மீனாட்சி ராமநாதன் - இருவரும் துப்பாக்கி சுடுவதில் உள்ள நுணுக்கங்களையும், அதற்கான உடல் - உள்ளத்தளவிலான பயிற்சிகளையும் விவரித்த போது, வியப்பும் மலைப்புமே ஏற்பட்டன.

திருச்சி - 9, கண்ணம்மா இராமசாமி.

◆ துப்பாக்கிக் கலாசாரம் பெருகிவிட்ட ஓர் சூழ்நிலையில், 'அமைதியை வலியுறுத்தும் துப்பாக்கிப் பயிற்சி' என்ற கவர் ஸ்டோரி மிகவும் வித்தியாசமாக இருந்தது.

திருச்சுழி, கந்தர் அழகேசன்.

◆ 'இந்தியாவில் பெட்ரோல் விலை ஏறுவதேன்?' என்பதற்கு இவ்வார கல்கியில் பால சுப்ரமணியன் சொன்ன காரணம் எல்லோருக்கும் எளிதில் புரியும்படியாக ரொம்ப சிம்பிளாக இருந்தது. பாராட்டுக்கள்.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

◆ ஆர். சூடாமணியின் ''பொய்க் கண்ணாடி'' நெஞ்சை நெகிழவைத்த அருமையான சிறுகதை தான்.

கோலகிருஷ்ணன் புதூர், ஆர்.கே. லிங்கேசன்.

◆ 'தல்பமாவி' சிறுகதை மக்களின் அறியாமையையும் மூட நம்பிக்கைகளையும் அருமையாகப் படம் பிடித்துக் காட்டியது. மொழி பெயர்ப்புச் சிறுகதை என்றே நம்ப முடியாத அளவுக்குச் சிறப்பாக மொழி பெயர்த்திருந்த சாந்தா தத் பாராட்டுக்குரியவர்.

அரூர், மு. மதிவாணன்.

◆ 'வெந்த புண்ணில் வேல்' என்பது போல, 'கேப்டன்' சரத்குமாரைக் கிண்டல் செய்து, கூடவே 'அரண்மனைக் காவலன்' சரத்குமாரை 'குத்தோ குத்தென்று' அதே வாரத்தில் குத்திக் கிழித்து விட்டீரே!

சிதம்பரம், ராஜமாதங்கன்.

◆ இன்னா... நைனா... கைல ஊசி டிக்கெட்ட வாங்கனமா, கம்னு கேப்டனை கண்டுக்கினு வந்துக்கினே இர்ந்தோமான்னு இல்லாம, ரொம்ப பத்தான் பேஜாரு பண்ற? வாத்யாரே, வேணாம்பா இந்த 'வாரிவுட்ற' வெளையாட்டு....!

சேலம் - 9, மு. இரவிச்சந்திரன்.

◆ கல்கி சிதம்பர நகரச் சிறப்பிதழில் 'கோயில் வெளிப் பிரகாரத்திலேயே மூக்கைப் பொத்திக் கொண்டு வலம் வர வேண்டிய நிலைமை' என்று எழுதியுள்ளீர்கள். இந்த நிலைமையை மாற்ற, சிதம்பரம் ரோட்டரி சங்கம் கோயிலுக்குள் பல தோட்டங்களை உருவாக்கி அதைச் சிறந்த முறையில் பேணியும் வருகிறது. ஊர்ப் பிரமுகர்கள் மற்றும் முன்னணி நிறுவனங்களின் நிதியுதவியுடன் இவை பராமரிக்கப்பட்டு வருகின்றன. பக்தர்கள் வசதிக்கென குழாய்க் கிணறும் குடிநீர்த் தொட்டியும் கூட அமைத்துள்ளோம்.

அண்ணாமலை நகர், எம். கலாநிதிநாதன்.

◆ கல்கி, அண்ணாமலை பல்கலைக் கழகம் பற்றிய இலவச இணைப்பில் அங்கு ''தமிழ் வளர்த்த பெரியார்கள்'' பற்றிக் குறிப்பிடும் போது பெரும் புலவர் ரா. இராகவையங்கார் பற்றி ஏதும் கூறப்படாதது கண்டு வருந்தினேன். ராஜா. சர் அண்ணாமலைச் செட்டியாரால் பல்கலைக் கழகத்தில் 1934 ல் துவக்கப் பெற்ற தமிழ் ஆராய்ச்சித் துறைக்கு முதல் தலைவராகத் துணை வேந்தரால் விரும்பி அழைக்கப் பெற்றுப் பொறுப்பேற்ற பொழுது, பெரும்புலவரின் வயது 65. ஏழு வருடங்கள் சிறப்புடன் பணியாற்றிப் பல முக்கியமான நூல்களைப் பல்கலைக் கழக வெளியீடுகளாகக் கொணர்ந்தார். இன்று தமிழுலகில் உலவும் புலவர்களில் பலர் (உதா: அ.ச. ஞானசம்பந்தம், வ.சுப. மாணிக்கம்) இவருடைய மாணாக்கர்கள்.

பம்மல், ரா. விஜயராகவன்.

# முதல்வர் பற்றி ரஜினி என்ன சொன்னார்?



● 'வீரா'வில் ரஜினி

ரஜினியெல்லாம் இந்த ஊர் மீட்டிங்களுக்கு லாயக்கேயில்லை. ஆறு மணியென்றால் நொடி தவறாத ஆறு மணிக்கு யாரும் உள்ளே நுழைவார்களோ? தயாரிப்பாளர் பஞ்சு அருணாசலமே லேட். அவர் மகன் இருந்தார். டைரக்டர் சுரேஷ் கிருஷ்ணா இருந்தார். போறாதா, வரவேற்க? ஏழெட்டு பத்திரிகையாளர்கள்; பத்து, பனி ரெண்டு திரையர்கள் மட்டுமே முன்னதாக வந்திருக்க, 'இதெல்லாம் ஒரு பொருட்டா?' என்ற ரீதியில் முதல் வரிசையில் உட்கார்ந்து, உடன் வந்திருந்த மனைவியுடன் அளவளாவ ஆரம்பித்து விட்டார், ரஜினி.

ஏப்ரல் 14, ரிலீஸாகப் போகிற ரஜினியின் 'வீரா' (இதைவிடவும் வாயில் நுழைகிற டைட்டில் கிடைக்குமா?) படத்தின் கேஸட் ரிலீஸ் விழா.

சாவகாசமென்றால் என்னவென்று நினைக்கிறீர்கள்? பஞ்சு, அன்னநடை பயின்று வர, முதல் பிரதி பெறவிருந்த ராமநாதன் ஆமைநடை பயின்று வர, வெளியிடவிருந்த இசைஞானி உள்ளே நுழைகையில் ஆறு நாற்பது! இதல்லவோ இந்தியன் பங்சுவாலிடி!

முக்கால் மணி லேட்டாகி விட்ட காரணத்தினாலோ என்னவோ - யாரும் அரை நிமிடத்திற்கு மேல் பேசாதது மகத்தான வியப்பு + ஆசுவாசம். ஹைக்கூ ரேஞ்சில் பஞ்சு வரவேற்க, அடுத்து வந்த ராமநாதனும், (தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை) அங்ஙனமே தொடர்ந்தார்.

இப்போதெல்லாம் நாலு சினிமாக்காரர்கள் ஒன்றாகக் கூடினால் வீடியோ திருட்டு, கேபிள் டீ.வி. ஊடுருவல் பற்றிப் பேசியே தீருவதென்பது. அரசியல்வாதியும் அடிதடியும் போல அந்தளை தவிர்க்க முடியாததாகி விட்டது. ராமநாதன்

## திருவாரூர்க்காரர்களுக்கு ஞாபகப்படுத்துகிறோம்!

**அடுத்து வரப்போகிற உங்கள் ஊர்ச் சிறப்பிதழை அலங்கரிக்க, உங்கள் படைப்புகளை அனுப்பவேண்டிய கடைசி நாள் 15.4.94. கடைசி நாள் வரை காத்திருப்பானேன்? தகவல்கள் நிறைந்த உங்கள் கடிதக் கணைகளை முன்னதாகவே அனுப்பி விடுங்களேன்! அக்கம் பக்கத்து ஊர்களின் சிறப்புகளையும் எழுதலாம்.**

**- ஆசிரியர்.**

ஆரம்பித்துப் போக, இறுதியில் பேசவந்த ரஜினியும் அதையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். முதல்வர், சினிமாத் துறையிலிருந்துதான் வந்தார். அவருக்கு இந்தத் துறையின் கஷ்ட நஷ்டங்கள் புரியும். நிச்சயம் ஏதாவது செய்வார் என நம்புவோம்' என்ற ரீதியில் தமக்கே உரிய வைகை எக்ஸ்பிரஸ் வேக வார்த்தைப் பிர யோகங்களில் பேசினார். ஏற்கனவே படு

● வெளியிடுகிறார் ராஜா...



பயங்கர ஸ்பீடு பேச்சு. மைக் வேறு ரஜினி பேசும் போது மட்டும் சுருதி குறைய, 'முதல்வர்' என்ற வார்த்தை மட்டும் ஸ்பஷ்டமாகக் காதில் கேட்டதா?

அப்போது அத்தனை பேனாக்காரர்கள் முகத்தையும் பார்க்க வேண்டுமே? ஏதாவது 'கமெண்ட்' சொல்கிறாரோ என்ற (காதில் சரியாக விழாத) கவலையில் ஒருவர் முகத்தை ஒருவர் அவசரமாகப் பார்த்துக் கொள்ள, நகம் கடிக்க, நெற்றி சொறிய.... ரஜினி பேசி, விழா முடிந்து வெகு நேரம் வரையிலும் இதே உறுத்தல்!

'உனக்கு ஏதாவது புது விஷயமாகக் கேட்டதா?'

'உனக்கு?'

**வீ**ரா, கேஸட் விற்பனையில் சாதனை படைத்திருக்கிறதாம். வெளியிட்ட முதல் நாளே ஒன்றரை லட்சத்திற்கு மேல் சேல்ஸ் என்று அறிவித்தார்கள். டபுள் பிளாட்டினம் டிஸ்க் கிடைத்திருப்ப தாகச் சொன்னார்கள்.

ரொம்ப நாளைக்குப் பிறகு, படத்தில் அத்தனை பாடல்களையும் ஹிட்டாக்குகிற முனைப்பில் இளையராஜா வெகு வெற்றி பெற்றிருக்கிறார். அன்று விழாவில் ஒலித்த 'வீரா' பாடல்கள் இதனை நிரூபித்தன.

**- கிச்சா**

படம் : 'தேர்ட் ஐ'.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, எக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# பார்க் டவுன்
# பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985
223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்:582676; 564354

## கனகதாரா முதலீட்டுத் திட்டம்

உங்கள் குழந்தைச் செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!
ரூ. 50,000/- செலுத்துவீர். 10 ஆண்டுகளில் ரூ. 50,000/-ஐ திரும்பப் பெறுவீர்.
மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் ரூபாய் **ஒரு கோடியை** பெறுவீர்.
(ரூ. 12,500/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்)

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ. 580/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

## பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19 1/2%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ. 7500/ ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,25,000/- பெறலாம்
ரூ. 9000/ ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்<br>சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி வீதம்<br>ரூ. 1.85 |
|---|---|---|

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம்,** B.Sc.
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

(Friday Weekly Holiday)

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன்,** B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours :
Week days 8.30 a.m. to 12.30 p.m. &
2.00 p.m. to 6.00 p.m.
Sunday 8.30 a.m. to 12 noon.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ''சொட்டு நீலத்துடன்'' வழங்கப்படும் இலவசப் பரிசுகள் என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன் தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு ''துளிகளே'' போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

**உபயோகிப்பவர்களுக்கு.**

உஜாலாவின் ஒவ்வொரு துளியும் துணிகளில் நிரந்தரமான வெண்மையை உண்டாக்கி மனதில் நிறைந்த திருப்தியை தருகிறது. நீரில் எளிதாக கரைந்து துணிகளின் இழைகளில் உடனடியாக உறிஞ்சப்பட்டு இணைவதன் ஆக்ஷன் மூலம் ஒரே சீராக பரவும் தன்மையை உடையது உடைகளின் அழுக்கை நீக்கி துணிகளுக்கு பளபளப்பான வெண்மையை தருகின்றது.
ORAL TOXICITY TEST சோதனை மற்றும் SKIN IRITATION TEST சோதனையில் சருமத்திற்கு எந்த கெடுதலையும் உண்டாக்காது என்று சான்றிதழ் பெற்றது உஜாலா. இது ஜோதி லேபரட்டரியின் ஒரு சிறந்த தயாரிப்பு ஆகும்.




**JYOTHY LABORATORIES**
Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.
Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா